# கல்கி

நதியா, ரேவதிக்குப் போட்டியா?

KALKI
16.2.86
ரூ. 1.50

சத்தூட்டம்
நிறைந்தது
குதூகலம்
மிகுந்தது!

புதியது!

# ஐஸ்-க்ரீம் சுவை

# காம்ப்ளான்®

அம்மாக்களே! இதோ சத்தூட்டம், சிறுவர்கள் அனுபவிக்கத் துடிக்கும் சுவையில்: நாவூறச் செய்யும் ஐஸ் க்ரீம். அவர்கள், வெப்பத்தினால் சரியாக உணவருந்தாத போது, அவர்களுக்கு அவசியமான போஷாக்கை அளிக்க 'ஜில்'லென்று குளிர்வித்த ஐஸ் க்ரீம் சுவைகாம்ப்ளான் கொடுங்கள்.

புரதங்கள், நேரடியாக உடல் வளர்ச்சிக்கு பலனளிக்கும் சத்துக்களாகும். காம்ப்ளான், மிகமேலான புரதச் சத்துக்களையும்—அதாவது, பால் புரதச் சத்துக்களையும் (20%) மற்றும் 22 இதர மூலாதார உணவுச் சத்துக்களையும் தருகிறது. இவை வளரும் சிறுவர்களுக்கு தினப்படி தேவைப்படுவதாகும். துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு—அன்றாடம் இருவேளை.

காம்ப்ளான் ருசிமிகுந்த சாக்கலேட், ஸ்ட்ராபெர்ரி, ஏலக்காய்—குங்குமப்பூ சுவைகளிலும் மற்றும் சாதாரண ரகத்திலும்கூட கிடைக்கிறது.

பால் சேர்த்திடத் தேவையில்லை.








**காம்ப்ளான்® -திட்டமிட்ட பரிபூரண உணவு**

GLC.203.12 Tam

# "பரிசு எனக்குப் புதிதில்லை; விருது என்னைப் பிரமிக்க வைக்கவில்லை"

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் ராஜராஜன் விருதான ஒரு லட்ச ரூபாய், இந்த ஆண்டு, ஜெயகாந்தனுக்கு வழங்கப்பட்டுள்ளது. அது பற்றி அவர் என்ன நினைக்கிறார்? 'மடம்' என்று செல்லமாய் ஜெயகாந்தனாலும் அவரோடு இருப்பவர்களாலும் அழைக்கப்படும் அவருடைய ஆபீஸில் அவரையே சந்தித்துக் கேட்டோம்.......

---

"**வி**ருது கிடைத்த விஷயம் எப்போது தெரிய வந்தது? அதை அறிந்ததும் உங்கள் ரியாக்ஷன் என்ன?"

ஒரு தூக்கலான பார்வையுடன், "உங்களுக்கு எப்படித் தெரியுமோ, அப்படித்தான் எனக்கும் தெரியும். ஒருவேளை முன்னாலேயே விருது கிடைக்கப் போகிறது என்கிற விஷயம் எனக்குத் தெரிந்திருந்ததென்று ஓம், அது எப்படித் தெரிந்தது என்று சொல்லிக்கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. பரிசெல்லாம் எனக்குப் புதிதில்லை; விருது என்னைப் பிரமிக்க வைக்கவில்லை" என்றார் ஜே.கே.

"கொஞ்ச காலமாய் எழுதுவதை நிறுத்திவிட்டீர்கள் போல் இருக்கிறதே? ஏன் இந்த வனவாசம்?"

"என்ன? வனவாசமா? அந்த வார்த்தையை உபயோகிக்காதீர்கள். பத்திரிகைகளில் நான் எழுதவில்லை என்பதால், ஆளே இல்லாமல் போய்விட்டதாய் அர்த்தமா? நான் இன்னமும் பிஸிதான். எழுதிக் கொண்டுதான் இருக்கிறேன்."

"கதைகளா?"

"கதைகள்.... கட்டுரைகள்.... எல்லாம்தான்.... எல்லாம் என் சிந்தனையின் வெளிப்பாடுகள்."

"வாரப் பத்திரிகைகளில் ஏன் எழுதுவதில்லை?"

"நான் என்றைக்குமே அவர்களிடம் போய் நின்றதில்லை. அவர்களாக என்னிடம்



வரும்போது எழுதித் தருகிறேன்.''

''மாத நாவல் புற்றீசலில் நீங்களும் சிக்கிக் கொண்டு விட்டீர்கள்போல் இருக்கிறதே?''

''இந்த ஒரு ரூபாய்க்கு ஒரு நாவல் என்கிற விஷயத்தை அறிமுகப்படுத்தினதே நான்தான். இன்றைக்கு அது ஒரு பெரிய பிஸினஸாகிவிட்டது. எனக்கு வேண்டிய ஒரு சிலர் என்னை எழுதும்படி நிர்ப்பந்தப்படுத்துகிறார்கள். அவர்களுக்காக நான் எழுதித் தருகிறேன். தட்ஸ் ஆல்!''

''டீ.வி.க்காக உங்கள் நாவலான 'பாரீஸுக்குப் போ' படமாக்கப்படுகிறதே. அது பற்றி....?''

''வெளியானதும் பார்த்துக் கொள்ளுங்கள். நான் ஏன் அதைப் பற்றிச் சொல்ல வேண்டும்?''

''சினிமாவுக்குக் கதையைத் தந்துவிட்டு, பின்னர் சினிமாவில் கதை சின்னாபின்னமாகிவிட்டதாய்ப் பலர் கூச்சலிடுகிறார்கள். உங்கள் கதை, வேறு ஒருவரால் படமாக்கப்படுகிறது. படமாக்கின விதத்தில் உங்களுக்குப் பூரண திருப்தியா? இல்லை காம்ப்ரமைஸ் பண்ண வேண்டியிருந்ததா?''

''திருப்திதான்! ஒரு மீடியத்திலிருந்து இன்னொரு மீடியத்துக்குப் போகும்போது சில மாற்றங்கள் அவசியமாகலாம். அவை கதையின் பெட்டர்மெண்ட்டுக்காகவும் இருக்கலாமே! மாற்றத்தை ஏன் 'காம்ப்ரமைஸ்' என்கிறீர்கள்? புரியவில்லை!''

''நீங்கள் இப்போதுள்ள கல்வித் திட்டம், எதற்கும் புண்ணியமில்லாதது என்கின்ற கொள்கையுடையவர். இப்போது புதிய கல்விக் கொள்கையை அறிமுகப்படுத்தப் போகிறார்களே! இது பற்றி என்ன சொல்கிறீர்கள்?''

''மாணவன் பழையவன்; ஆசிரியர் பழையவர்; பள்ளிக்கூடம் பழையது; சூழ்நிலை பழையது; எல்லாம் பழையது. அப்புறம் எப்படி வந்தது புதிய கல்விக் கொள்கை?''

''அதெல்லாம் பழையதாய் இருந்தாலும் சொல்லித் தரப்படப் போகிற விஷயங்கள் புதியவைதானே!''

''முதலில் எல்லாருக்கும் வேலை தர வழி செய்யுங்கள். அது போதும்!''

''நீங்கள் சமீபகாலமாய்ச் சினிமா ஒன்றும் எடுக்கவில்லையே?''

''முதலில் நீங்கள் ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். அடிப்படையில் நான் ஓர் எழுத்தாளன்; சிந்தனையாளன். நான் சமுதாய மேம்பாட்டுக்காகச் சிந்திக்கிறேன். மக்கள் என்னைச் சிந்திக்கப் பணித்திருக்கிறார்கள். சினிமா ஒரு கிளை அவ்வளவே!''

''நீங்கள் ஒரு தீவிரமான கம்யூனிஸவாதி! ஆனால் இப்போது காங்கிரஸ் கூட்டங்களில் பேசுகிறீர்களே?''

''ஆமாம்! காங்கிரஸ் கூட்டங்களில் பேசச் சொல்கிறார்கள்; பேசுகிறேன்.''

''இப்போது ராஜீவ் பொருளாதாரத்தைப் பொருத்தமட்டில் அமெரிக்காவின் முதலாளித்துவக் கொள்கைபால் ஈர்க்கப்பட்டிருப்பதுபோலத் தெரிகிறதே! அது கம்யூனிஸத்துக்கு முரண்பாடானதில்லையா? அப்படியிருந்தும்.....''

''ராஜீவ்தான், இந்தியாவின் நடுநிலைமை பற்றியும், இந்திய — ரஷ்ய நட்புறவு எத்தனை பழைமையானது, ஆழமானது என்றும் அத்தகைய ஆழமான நட்பை அமெரிக்காவுடன் ஏற்படுத்த நெடுங்காலமாகும் என்றும் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறாரே! காங்கிரஸும், கம்யூனிஸமும் ஒன்றாய்ச் சேர வேண்டும். அப்போதுதான் உருப்படியாய் ஏதாவது செய்யமுடியும். இதைத்தான் நான் காங்கிரஸ் மேடைகளில் சொல்லி வருகிறேன்.''

''இதையே நீங்கள் கம்யூனிஸ்ட்டு மேடைகளிலும் சொல்கிறீர்களா?''

''கம்யூனிஸ்ட்டு மேடைகளில் என்னைப் பேசவே விடுவதில்லையே!''

''சரி, நாளைக்கே காங்கிரஸ் கட்சி உங்களுக்குத் தேர்தலில் போட்டியிட இடம் தந்தால் நீங்கள் போட்டியிடுவீர்களா?''

''ஒருபோதும் மாட்டேன்! இப்போது நான் அமர்ந்திருக்கிறேனே, இந்த அரியணைக்கு வேறு ஏதும் ஈடாகாது!'' என்று சொல்லிவிட்டு, ஜெயகாந்தன் சொன்னவற்றைப் பிரசுரித்தால் பால்ராஜ் விவகாரம் போல இன்னொன்று உருவாகிற சாத்தியமுண்டு.

''பாரதி நூற்றாண்டில், பாரதியார் பற்றிப் படம் எடுக்கப் போவதாய் அறிவித்தீர்களே! அது என்ன ஆயிற்று?''

''அது என் லட்சியம் என்றுதானே சொன்னேன். அதை உடனே நிறைவேற்ற வேண்டுமென்கிற கட்டாயமில்லையே!''

''நீங்கள் எடுக்கப் போவதாய்ச் சொல்லியிருப்பதால், பாரதியார் படமெடுக்கிற எண்ணமுள்ள மற்றவர்கள் 'எதற்கு வீண் போட்டி' என்று ஒதுங்கிக் கொள்ளலாமில்லையா?''

பலமாய்ச் சிரித்துவிட்டுச் சொன்னார்: ''ஜெயகாந்தன் பார்த்துக் கொள்ளட்டும் என்று சினிமாக்காரர்கள் ஒதுங்கிக் கொள்வது இருக்கட்டும். எழுத்தாளர்கள் எல்லாம் ஜெயகாந்தன் எழுதிக் கொள்ளட்டும் என்று இருக்கமாட்டேன் என்கிறார்களே!'' மறுபடியும் சிரிப்பு!

''இன்று எழுதுகிற பலர் தங்களுக்கு இன்ஸ்பிரேஷன் ஜெயகாந்தன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே!''

''குருடர்கள் தடவிப் பார்த்த யானைதான் இவர்கள் எல்லாருக்கும் ஜெயகாந்தன்.''

பேட்டி: எஸ். சந்திரமௌலி

படம்: யோகா

---



நாட்டில் வீரியமற்ற மக்களின் தொகை பெருகி வருகிறது என்றுதான் நான் அஞ்சுகிறேனே அல்லாது, மக்கள் தொகை பெருகுவது குறித்து எனக்கு அச்சமில்லை. மக்கள் வீரியம் உள்ளவர்களாயும், உழைப்பாளிகளாயும், திறமைவாய்ந்தவர்களாயும் இருப்பின் அவர்களின் தொகை எவ்வளவு பெருகியபோதிலும் அச்சுமையைத் தாங்குவதற்கு பூமி தேவியினால் முடியும் என்று நான் நம்புகிறேன்!

—வினோபாபாவே. தகவல்: டி. எல். ரெட்டி.

* பாலை சண்முகம்

"சென்னை மக்களுக்குக் கொஞ்சமேனும் சமுதாய உணர்ச்சி இருந்தால், நடைபாதைத் தடைகளை அகற்றி, மக்களுக்குச் சேவை புரிந்த மாநகராட்சிக் கமிஷனர் மலைச்சாமி மாற்றப்பட்டபோது, குறைந்தபட்சம் ஒரு கண்டனக் கூட்டமாவது நடத்தியிருப்பார்கள். ஆனால் யாரும் செய்ததாகத் தெரியவில்லையே" என்று ஆதங்கத்தோடு கேட்டார் பாலை சண்முகம். கேட்ட இடம்: மயிலை சீனிவாச சாஸ்த்திரி ஹால். பேசியது: சிவில் உரிமைக் கழகத்தின் சார்பில். அவர் பின்னர் தொடர்ந்தார்:

"இதே போன்ற நிலை திருநெல்வேலியில் ஏற்பட்டது. 27 வயதான குர்னிகால் சிங் என்ற உதவி கலெக்டர் மக்களுக்குப் பல சேவைகள் செய்தார். உள்ளே நுழைய முடியாத பாளையங்கோட்டை மார்க்கெட் ஆக்ரமிப்புகளை அகற்றிச் சுத்தப்படுத்தினர். சாலையை ஆக்ரமித்திருந்த தனியார்களை விரட்டியடித்தார். பதினெட்டுப் பெண்கள் மர்மமான முறையில் மரணமடைந்ததற்குக் காரணம் தேடினர். மயானப் பாதை இல்லாத கிராமங்களுக்குப் பாதை போட்டுக் கொடுத்தார். 'தாடிக்கார ஆபீஸர்' என்று பொது மக்களால் செல்லமாக மெச்சப்பட்ட இந்த அதிகாரி பத்தே மாதங்களுக்குள் மாற்றப்பட்டார். இது முழுக்க முழுக்க அரசியல்வாதிகளின் தலையீட்டால் பிறப்பிக்கப்பட்ட மாற்றல் உத்தரவு. இதில் வேடிக்கை என்னவென்றால் குர்னிகால் சிங் மீது என்ன

பாவம் அதிகாரிகள்



# சொன்னதைக் கேட்காவிட்டால் உடனே டிரான்ஸ்ஃபர்தான்!

காரணம் சொல்லி நடவடிக்கை எடுப்பது என்று தலைமைச் செயலாளருக்குப் புரியவில்லை. அந்த அளவுக்குச் சுத்தமானவர் குர்னிகால் சிங்.

"கடைசியில் ஒரு காரணம் கிடைத்தது. குர்னிகால் சிங்கின் மனைவி 'வடநாட்டு உணவு வகைகள் செய்வது எப்படி' என்று சொல்லித் தர இலவச வகுப்பு ஒன்றை நடத்தி வந்தார். அந்த வகுப்பு பற்றிக் கொடுத்த துண்டுப் பிரசுரங்களில் உதவி கலெக்டர் வீட்டுத் தொலைபேசி எண் இருந்தது. அப்பாடா! தலைமைச் செயலாளருக்குக் காரணம் கிடைத்தது. "அரசு அதிகாரி வீட்டில் வைத்துள்ள அலுவலகத் தொலைபேசியை அவரது மனைவி எப்படி வேறு காரியங்களுக்கு உபயோகப்படுத்தலாம்?" என்று கேள்வி கேட்டு நோட்டீஸ் அனுப்பி மாற்றல் உத்தரவும் பிறப்பித்துவிட்டார். இத்தனைக்கும் வெளியேயிருந்துதான் இந்த வகுப்பு பற்றிய விவரம் அறிய ஃபோன் வரப்போகிறதே யொழிய அதிகாரியின் மனைவி யாரிடமும் ஃபோன் போட்டுப் பேசப் போவதில்லை; அதற்கு அவசியமும் இல்லை. ஆனாலும் ஏதேனும் ஒரு காரணம் வேண்டுமே மாற்றல் உத்தரவு பிறப்பிக்க! இது கிடைத்தது. ஏதோ மற்ற அதிகாரிகள், அமைச்சர்களின் இல்லத்தரசிகள் கணவரின் ஃபோனைக் கையாலேயே தொடாதவர்கள் என்று நாம் நம்ப வேண்டுமாம்!

"ஏதோ ஒருவிதத்தில் பாதிக்கப்பட்ட அரசியல்வாதிகளின் தலையீட்டினால்தான் இப்படிப்பட்ட திடீர் மாற்றல் உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றன. இந்த அநீதியை எதிர்த்துத் திருநெல்வேலியில் நாங்கள் கடையடைப்புச் செய்தோம். சர்வ கட்சி சார்பில் 5000 பேர் ஊர்வலமாகப் போய்க்

கண்டனம் தெரிவித்தோம். ஆனால் சென்னை போன்ற பெரிய நகரத்தில் இருக்கும் நீங்கள், மலைச்சாமி மாற்றல் விவகாரத்தில் விரலைக் கூட அசைக்கவில்லையே, ஒரு சின்ன எதிர்ப்பு அல்லது கண்டனம் தெரிவித்ததாகக் கூடத் தெரியவில்லையே. இந்தப் போக்கு நல்லதல்ல. இப்படி மக்கள் அலட்சியமாக இருந்தால் நேர்மையான அதிகாரிகள் கூட இனிமேல் 'நமக்கென்ன வந்தது' என்று அரசியல்வாதிகளின் 'ஆமாம் சாமி' களாக மாறுவார்கள். பிறகு லஞ்சம் வாங்கவும் துணிவார்கள். நகருக்கு நல்லது செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் செயல்பட்ட மலைச்சாமி இன்று எழுது பொருள், அச்சகத் துறையில் இயக்குனராக இருக்கிறார். அவரே தொடர்ந்து சென்னை கமிஷனராக இருந்திருந்தால் தமிழகத் தலைநகருக்கு இன்னும் எவ்வளவோ நன்மைகள் செய்திருப்பார்.''

இப்படி படபடவென்று பொறிந்து தள்ளிய பாலை சண்முகம் மேலும் ஓர் உதாரணமும் தந்தார்:

''சி.வி.எஸ். மணி என்ற மூத்த அதிகாரி (தலைமை செயலாளருக்கும் சீனியர்) சென்னைப் பெருநகர் வளர்ச்சிக் குழுமத்தின் **(MMDA)** தலைவராக இருந்தார். தமிழக அமைச்சரவை மீது மிகுந்த செல்வாக்குப் பிரயோகிக்கக் கூடிய பணம் உடைய ஒருவர் அண்ணாசாலையில் பல மாடிக் கட்டடங்கள், கட்ட அனுமதி கேட்டார். ஆனால் மணி கொடுக்கவில்லை. 'மணி' கொடுத்தாலும் வாங்க மறுப்பவர் இந்த மணி. பணம் உடையவருக்கோ காரியம் நடந்தாக வேண்டும். எனவே அந்த சீனியர் அதிகாரியை மாற்ற வழி செய்துவிட்டார். இப்போது அவர் தமிழக அரசின் நஷ்டமடைந்து கொண்டிருக்கும் ஒரு தொழிற்சாலையில் பணிபுரிகிறார். ''இவர்கள் தொல்லையே வேண்டாம்'' என்று டெல்லிக்குப் போக முயன்று கொண்டிருக்கிறார் அவர்.

''அடுத்து மாதவ சர்மா என்ற அதிகாரி. கார்ப்பரேஷனில் தனி அதிகாரியாக இருந்தவர். போன வருடம் நவம்பரில் அடித்த மழை, புயல் காரணமாக சென்னை நகரச் சாலைகள் நாசமாயினவல்லவா? சில குறிப்பிட்ட சாலைகளைப் புதுப்பிக்கும் ஒப்பந்தத்தை ஒரு குறிப்பிட்ட காண்ட்ராக்டரிடம் விட வேண்டும் என்று அந்த அதிகாரியிடம் ஒரு குறிப்பிட்ட மந்திரி சொன்னார். ஆனால் சர்மாவோ, ''முடியாது; அந்தக் குறிப்பிட்ட காண்ட்ராக்டர் கறுப்புப் பட்டியலில் இருக்கிறார்'' என்று கூறி மறுத்துவிட்டார். அவ்வளவுதான், ரிப்பன் கட்டடத்திலிருந்து அவரைத் துரத்திவிட்டார்கள்!

''தன் இஷ்டத்துக்கு உடன்படாத அதிகாரிகளைத் தள்ளிவிட திட்டக் கமிஷன் என்று ஒன்றை வைத்திருக்கிறார்கள். திரவியத்தைத் தலைமைச் செயலாளராக்க வேண்டும் என்று கார்த்திகேயனை அந்தக் கமிஷனில் தள்ளிவிட்டார்கள். வெங்கடசுப்பிரமணியம் என்ற கல்வி அதிகாரி, சத்துணவுத் திட்டம் பற்றித் தனது கருத்துக்களைச் சுதந்திரமாகச் சொன்னதற்காக அவரை அதே திட்டக் கமிஷனுக்கு அனுப்பி வைத்தார்கள். இப்படி 'வைத்தால் குடுமி; சிரைத்தால் மொட்டை' என்ற ரீதியில் அமைச்சரவை செயல்பட்டால் எந்த அதிகாரிக்குத்தான் சமுதாயக் கண்ணோட்டத்துடன் வேலை செய்யத் தோன்றும்! இந்த ஆபத்தான போக்குக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டுமென்றால் மக்கள்தான் விழிப்புணர்ச்சி பெற வேண்டும். கொஞ்சமேனும் இது போன்ற விஷயங்களில் எதிர்ப்புணர்ச்சியைக் காட்டினால்தான் அரசு பயப்படும்.''

— நமது நிருபர்

# மாதம் ஒரு மாவட்டம்

பெரியார் மாவட்ட மக்களுக்கு......

கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில், இரண்டாவது மாவட்டமாகப் பெரியார் மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்திருப்பது உங்கள் அனைவருக்கும் தெரியும். அதன்படி, பெரியார் மாவட்டம் பற்றிய குறைகளும், முறையீடுகளும் தவிர, பெரிய சாதனைகள் என்று நீங்கள் கருதுகிற விஷயங்களைப் பற்றிய குறிப்புக்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி 20.2.86.

உடனே எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்.









மங்கல சௌபாக்கியத்தின் சின்னம்

# ஐடெக்ஸ்

## டீலக்ஸ் குங்குமம்

matt finish




**ஐடெக்ஸ்** 48 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்

அரவிந்த் லாபரடரீஸ், சென்னை 600 033.

Imageads 2249 Tam

# வடக்கே இருந்து வந்த தென்றல்...

# நதியா, ரேவதிக்குப் போட்டியா?



**ப**ம்பாயில் வாசம். மெட்ராஸில் ஷூட்டிங்; நதியாவின் இன்றைய வாழ்க்கை! ராஜாஜி ஹாலில் நூற்றுக் கணக்கான தலைகள். ராக்ஷஸ ரிஃப்ளெக்டர்கள். டப், டப் க்ளாப்சத்தங்கள். நடுவில் நாளையத்திரையில் 35 mm இல் சிரிக்கும் நதியா.

''ஹாய் ஸரீனு!''

நதியாவின் புருவங்கள் உயர்ந்து விழிகளில் ஆச்சரியம்!

''ஹாய்'' சினிமாவில் பார்த்த அதே அலட்சியம். அதே சுறுசுறு. அதே துரு துரு. ''என் ஒரிஜினல் நேம் உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''உங்கள் அப்பா! இன்னும் நிறையச் சொல்லியிருக்கிறார். நீங்கள் ஸ்கூலில் செய்த கலாட்டாக்கள்; காலேஜில் ஒரு புரொஃப்ஸரைக் கிண்டல் செய்து.....

''ஷ்ஷ்ஷ்.தனியே பேசுவோமே.''

சிவப்பில் சூரிதார். கதாநாயகர்களை ஹைஹீல்ஸ் போடவைக்கும் உயரம். கைகளில் சினிமாவுக்காகப் போட்ட கலகல வளையல்கள் (ஈஸ்ட்மென் கலர்) பளீரென மலரும் சிரிப்பு. கண்களில் பக்கெட் பக்கெட்டாய்க் குறும்பு. சற்றுத் தேய்ந்தது போன்ற கரகர குரல்.

தனியாய் வந்தவுடன் பேசத் தொடங்கினார்.

''காமிராவுக்கு முன்னால் நிற்கும்போது எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. நான் அதிகம் சினிமா பார்த்தவளில்லை. அபூர்வமாய் நல்ல ஆர்ட் ஃபிலிம்களை மட்டும் பார்ப்பேன். ஸ்லோவாய் இருந்தாலும் அந்தப் படங்களில் இருக்கும் ரியலிஸத்தை....''

''வெயிட்!'' என்று இடைமறித்தோம். ''நீங்களும் ஆரம்பித்துவிட்டீர்கள்! ஆர்ட் ஃபிலிம்! அப்படியென்றால் என்ன?''

''பாருங்கள். நான் சொல்வது நல்ல படங்களை—சமீபத்தில் மகேஷ் பட்டின் படத்தைப் பார்த்தேன். ரசித்துவிட்டேன். ஜனம் என்ற அந்தப் படத்தில் ஒரு தந்தை—மகன் உறவை வெகு அற்புதமாய் வெளிக் கொணர்ந்திருந்தார். கமர்ஷியல் குப்பைகளை நான் பார்ப்பதேயில்லை. அப்படியே பார்த்தாலும் நண்பர்களுடன் ஃப்ரேமுக்கு, ஃப்ரேம் 'ஏய், நீள மயிருடி அவனுக்கு. இவன் மூஞ்சியைப் பாரேன் அடிபட்ட குரங்காட்டம்' என்று கிண்டல் செய்து சிரித்துவிட்டுப் போவேன்.''

''உங்கள் முதல் படம் 'பூவே பூச்சூட வா' எப்படி? கமர்ஷியல் ஜாதியா, ஆர்ட் ஜாதியா?''

''வெல். கமர்ஷியல்தான். ஆனால் சரா

சரியான சண்டைகளும், டூயட்களும் இல்லாத ஒரு ஸைலண்ட் கமர்ஷியல். ஒரு டச் ஆஃப் கிளாஸ் இருந்தது.''

''காரெக்டர் பற்றித் தெரிந்துதான் நடிக்க ஒப்புக் கொண்டீர்களா?''

''அப்பா விவரமாய்ச் சொல்லியிருப்பாரே.''

''முதல் படம் சரி. இப்போது பிஸி ஆர்ட்டிஸ்ட். நல்ல காரெக்டர்கள்தான் வரு மென்று சொல்ல முடியாதே.''

''மதர்லேண்ட், ஃபிலிம்கோ, சத்யா என்று பெரிய பெரிய பானரானாலும் கூட அப்பா கதை கேட்டு ஸைலண்ட் ரோல் என்று தெரிந்து கொண்டுதான் சம்மதம் கொடுப்பார். கமர்ஷியல் ஃபிலிம்களிலும் இப்போது நிறையக்கலைநயப்படங்கள்வருகின்றனவே— பாலசந்தர் படங்களைப் போல. அந்த மாதிரி யான டைரக்டர்களின் படங்களில் நடிப் பதை நான் மிகவும் விரும்புகிறேன்.''

''சிறிய ரோல்கள் வந்தால்கூட?''

''சின்ன ரோலாயிருந்தாலும், அழுத்த மானதாய் — கதைக்கு முக்கியமானதாய் இருக்க வேண்டும். 'நானும் தலைகாட்டி னேன் டைப்' ரோல்கள் வேண்டாம்.''

''எந்த மாதிரியான பாத்திரங்களில் உங் களால் சோபிக்க முடியும் நதியா?''

''இயற்கையிலேயே நான் குறும்புக்காரப் பெண். கட்டித்தனமான பாத்திரங்களை என் றால் வெகு சுலபமாய்ப் பண்ண முடிகிறது. ஆனால் அதே பிராண்ட் குந்தி லைரியோ டைப்பாய் செய்யச் சொல்கிறார்கள். போர் அடிக்கிறது.''

''சமீபத்தில் கட்டித்தனமான பாத்திரங்



களில் வெகுவாகச் சோபித்துவந்தரேவதிக்கு நீங்கள் போட்டியாய் வந்திருக்கிறீர்கள் என்கிறார்களே.''

நதியா ஒரு 'நதியா பிராண்ட்' சிரிப்பை உதிர்த்தார். ''ஓ.... நோ! ரேவதிக்கு என்று ஒரு குறிப்பிட்ட பர்சனாலிட்டி இருக்கிறது. ஸ்டைல் இருக்கிறது. அதை நான் முயற்சி செய்தால் முட்டாள்தனமாய் இருக்கும். அதேபோல் நான் செய்யும் வேஷங்களை ரேவதி செய்தால் நிச்சயம் எடுபடாது. நாங்கள் இதுவரை சந்தித்ததுகூட இல்லை. அவருடைய ஒரே ஒரு படத்தைத்தான் — என்ன படம் டாடி அது? — யா, காற்றத்த கிளிக் கூடு — அதில் மட்டும்தான் ரேவதியைப் பார்த்திருக்கிறேன்.''

''ஓ. கே. ரேவதிக்குப் போட்டியில்லை என்றால் யாரைப் போல் வரவேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள்?''

''ஷபானா ஆஸ்மியைப்போல். ரேகாவைப் போல். தெற்கில் ஸ்ரீவித்யாவைப் போல். **I admire them.**''

''நடிகர்களில் யாரைப் பிடிக்கும்?''

''நஸ்ருதீன் ஷா, நெடுமுடிவேணு''

''பத்மினி?''

''பத்மினி? **She is a very very nice person.** ஆரம்பத்தில், 'ரொம்பப் பெரிய ஆக்ட்ரஸ்டி, ஜாக்கிரதையா நடந்துக்க' என்று எல்லோரும் பயமுறுத்தினார்கள். ஆனால் எனக்கு பயமே இல்லை. யூ நோ வை? பத்மினி நடித்த படங்களை நான் பார்த்ததே கிடையாது. ஆனால் பத்மினி ரொம்ப சோஷியல் டைப். என்னுடன் வெகு அன்பாய்ப் பழகினார். மெலிந்த குரலில் மிருதுவாய்ப் பேசுவார். என்னுடைய சொந்தப் பாட்டியுடன் கூட இருந்த மாதிரியே ஃபீல் பண்ணினேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.''

''முதலில் மலையாளம், அப்புறம் தமிழ். அதே படத்தை இரண்டாவது முறை செய்ய போரடிக்கவில்லை?''

''இல்லை. உண்மையில் மலையாளத்தை விட தமிழில் நான் நிறைய **improve** செய்திருக்கிறேன். முக்கியமாய் க்ளைமாக்ஸ் காட்சியை மலையாளத்தில் சரியாய்ச் செய்யவில்லை என்று தோன்றியது. தமிழில் இன்னும் சிறப்பாய்ப் பண்ணினேன்.''

''மொழிப் பிரச்னை?''

''ஐயோ, நிறைய! மலையாளமும் தெரியாது. தமிழும் தெரியாது. வசனங்களை ஹிந்தியில் எழுதி இரண்டு நாட்களுக்கு முன்னாலேயே வாங்கி வைத்து அர்த்தத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டு பேசிப் பார்த்துப் பயிற்சி செய்தேன்.''

''ஹிந்தி மட்டும்தான் தெரியுமாக்கும்?''

''குஜராத்தி, மராத்தி, இங்கிலீஷ் மூன்றும் அத்துப்படி. இப்போது மலையாளம், கொஞ்சம் தமிழ்.''

''வதந்திகள்?''

''ஹோ.... வதந்தி வந்த பக்கத்தை சுவாரஸ்யமாகப் படிப்பேன். அதைப் பத்திரிகையில் 'ஒரு பக்கம்' என்ற அளவில் மட்டுமே பார்த்துவிட்டுத் திருப்பிவிடுவேன்.''

''காதல் காட்சிகளில் நெருங்கி நடிக்க மறுக்கிறீர்களாமே?''

''என்ன தப்பு? மடியில் உட்கார் என்று சொன்னால் பக்கத்தில் உட்காருகிறேனே என்று சொல்கிறேன். வெகு அந்நியோன்னியமான காட்சிகளைத் தவிர்க்கிறேன். விழுந்து புரளாமலேயே காதல் காட்சிகளில் கிளுகிளுப்பைக் கொண்டுவர முடியும். வாட் டு யூ ஸே?''

''ரசிகர்கள் எப்படி?''

''காதலிக்கிறேன், கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று கோரிக்கைவிடும் நிறையக் கடிதங்களைப் பார்த்தவுடன் பொங்கிக் கொண்டு சிரிப்பு வரும். சிரித்துவிட்டு மறந்துவிடுவேன். நேரில் வரும் ரசிகர்கள் முண்டியடித்துக் கொண்டு வருவார்கள். அருகில் வந்தவுடன் என்னுடன் பேசத் துடித்துக் கொண்டு, ஆனால் வார்த்தை வராமல் ஆர்வத்துடன் நிற்பதைப் பார்த்தால் சிரிப்பு வரும். எதேச்சையாகத் தெருவில் என்னைக் கடந்துவிட்டுச் சடடென்று நின்று, 'அடடே, வாழ்க்கையில் முக்கியமான ஒன்றை மிஸ் பண்ணிவிட்டோமே' என்று திரும்பிப் பார்ப்பவர்களைப் பார்த்தால் வேடிக்கையாய் இருக்கும்.''

''நதியா என்ற நடிகையிடம் கேள்விகள் ஓவர். இனி ஸெரீனா என்ற பெண்ணிடம் சில கேள்விகள்?''

''ஷூட்!''

''நதியாவாக மாறிய பிறகு வீட்டில் எல்லோரும் எப்படிப் பழகுகிறார்கள்?''

''அப்ஸொல்யூட்லி நோ டிஃபரன்ஸ். இன்னும் சொல்லப் போனால் இப்போதுதான் நான் அவர்கள் கம்பெனியை வெகுவாக என்ஜாய் பண்ணுகிறேன். யூ நோ வை? நான் அவர்களுடன் சேர்ந்திருக்கும் நேரம் குறைந்துவிட்டது. வீட்டில் நான் அதே பழைய குறும்புக்கார ஸெரீனா தான்.''

## நதியாவைப் பற்றி நதியாவின் தந்தை

நதியாவின் தந்தை மொய்து எளிய உடையில் இருந்தார். சகஜமாகப் பேசினார். மலையாளம் கலந்த தமிழ்.

* நதியா இன்னும் இரண்டு வருடங்கள்தான் சினிமாவில் இருப்பாள். அப்புறம் அவளைக் கல்யாணம் செய்து அனுப்பி விடுவேன்.

(நதியா சொன்னது: நல்ல ரோல்களாக வந்தால், தமிழ்ப் படவுலகில் நான் வெற்றி அடைந்தால் தொடர்ந்து நடிப்பேன்.)

* நதியா ரொம்ப எமோஷனல் டைப். முதலில் மலையாளப் படம் கொஞ்சம் எடுத்து ரஷ் போட்டுப் பார்த்து ஃபாசில் 'நீ இன்னும் நன்றாகப் பண்ண வேண்டும்' என்று சொன்னவுடன் 'ஓ'வென்று அழ ஆரம்பித்துவிட்டாள். இனிமேல் நடிக்கமாட்டேன் என்று சொல்லிவிட்டாள். அப்புறம் அவளைச் சமாதானப் படுத்துவதற்குள் எங்களுக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது. என்கரேஜ் செய்தால் ரொம்ப நன்றாகப் பண்ணுவாள். டிஸ்கரேஜ் செய்தால் அவளுக்குப் பிடிக்காது.



''உங்களுடைய வீக்னெஸ் என்ன என்று யோசித்திருக்கிறீர்களா?''

''யோசிப்பதென்ன... பட்டவர்த்தனமாய்த் தெரியும் (சொல்லும்போதே சிரிப்பு பொத்துக் கொண்டு வருகிறது) என்னுடைய பெரிய வீக்னெஸ் இந்தச் சிரிப்புத்தான். சீரியஸாய் படப்பிடிப்பு நடந்து கொண்டிருக்கும் நேரத்தில்கூட, யாராவது சின்ன ஜோக் அடித்தால் போதும். என்னால் சிரிப்பை அடக்கமுடியாது. அப்புறம் டேக், ரீடேக் ஆகி....'' (கல, கல, கல, கல)

''உங்களுடைய ஸ்ட்ராங் பாயின்ட்?''

''யாருடனும் என்னால் சகஜமாய்ப் பழக முடிகிறது. செட்டில் எத்தனை பேர் இருந்தாலும் 'உம்'மென்று இல்லாமல் கலகலப்பாக இருப்பேன். சுலபத்தில் களைப்படையாமல் எத்தனை டேக்குகளுக்கும் சரி என்பேன். நான் ரொம்ப பங்க்சுவல் டைப்.''

''ஜெனரலாய் ஆண்களைப் பற்றி...?''

''ஆண்கள்..., சில விஷயங்களைப் பெண்களிடம்தான் பேசமுடியும். சில விஷயங்களை ஆண்களிடம்தான் பேசமுடியும். ஆண்களிடம் ஒரு பெரிய அட்வான்டேஜ்: வம்பு பேசமாட்டார்கள். ஆனால் அவர்களிடம் நான் ஜாக்கிரதையாகவே இருக்க விரும்புகிறேன். ஒரு குறிப்பிட்ட இடைவெளி விட்டுத்தான் பழகுகிறேன்.''

ஹோ. எத்தனை விஷயங்கள்! கலகலவென்று கொட்டினார்: ஆசிதார்தான் பிடித்த டிரெஸ், **This guy, that guy** என்று ஆண்களைப் பற்றித் தோழிகளிடம் பேசியது. **fantastic** க்ளாஸ்மேட்களுடன் அடித்த ஆட்டங்கள். ஒவ்வொரு ஷாட்டிற்கும் அந்த ஷாட்டிற்குத் தேவையான மூடிற்கு தன்னைக் கொண்டு வந்தது, பம்பாய் வீட்டில் வாழ்த்துக் கார்டுகளைப் பெயின்ட் பண்ணுவது. டேப்பில் வெஸ்டர்ன் ம்யூஸிக்கைப் போட்டுவிட்டு கூடவே பாடிக் கொண்டு ஆடுவது. ரொம்பவும் உணர்ச்சிவசப்படுவது. நிறைய அப்சர்வ் செய்வது — 'ஜர்னலிஸ்ட்'டாக நடிக்க வேண்டுமென்றால், இப்போது நீங்கள் கையில் பேனா பிடித்திருக்கும் ஸ்டைலை எல்லாம் கொண்டு வருவேன் —

மழை பெய்து ஓய்ந்த மாதிரி இருந்தது.

கடைசி கடைசியாக ஒரே ஒரு கேள்வி கேட்டோம். மழை விட்ட பின்பும் தூவானம் போல். ''நீங்கள் ஏதாவது ஒரு குறிப்பிட்ட ரோலைச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்களா?''

கொஞ்சம் வித்தியாசமான பதிலைத் தந்தார்:

''யெஸ், நிஜத்தில் நான் ஒரு மனிதரைப் பார்த்திருக்கிறேன். மரக்கட்டை போன்ற முகம். **Dead face**. உணர்ச்சியே அற்ற முகம். காதலிடன் 'ஐ லவ் யூ' என்று சொன்னாலும் கூட உணர்ச்சியே காட்டாத முகம். அது எப்படி முடியும் என்றே தெரியவில்லை. ஸ்க்ரீனில் அந்த மாதிரி முகத்தைக் காட்டினால் நன்றாக வராது என்று நான் நினைத்தாலும்கூட நான் அந்த மாதிரி ஒரு ரோலைச் செய்ய விரும்புகிறேன்.''

புறப்பட்டுவிட்டோம்!

சந்திப்பு: **ஜெயமன்மதன்.**

அட்டை வண்ணப்படம்,

படங்கள்: **யோகா.**


சமத்துக் கொளந்தே!
அந்தச் செய்னைக் கொடு!...
இந்தா.. மிட்டாய்
சாப்பிடு!
கண்துடைப்புச் சலுகை


மக்கள்
எரிபொருள் அபரிமித விலை ஏற்றம்




இந்த புரல் தான்
ஜம்முனு இருக்கு!
ஒரு கை பார்த்
துடறேன்!
தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி யின் சமரச திட்டம்


வீரப்பன்




ஜெயலலிதா
ஜெயலலிதா ஆதரவாளர் இடம் பெறாத பஞ்சாயத்து வேட்பாளர் பட்டியல்




கல்கி

1986 பிப்ரவரி 16
மலர் 44 இதழ் 29
குரோதன மாசி 4




# நெடுமாறன் வெளியிட்ட அதிர்ச்சி தரும் தகவல்கள்!

காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறன் இரு அதிர்ச்சி தரும் தகவல்களை வெளியிட்டிருக்கிறார். ஸ்ரீலங்கா ராணுவத்துக்குத் தேவையான கனரக ஊர்திகளை உற்பத்தி செய்து அளிக்க இந்திய மோட்டார்கள் தொழிலகம் ஒன்று ஆர்டர் பெற்றிருக்கிறது; இதற்கு நமது அரசு அனுமதி அளித்திருக்கிறது என்பது ஒன்று. மற்றொன்று, இந்தியத் தொழிலதிபர்களை ஸ்ரீலங்காவில் முதலீடு செய்யுமாறு ஜெயவர்த்தன அழைத்திருக்கிறார்; இதையும் இந்திய அரசு ஏற்றுச் சம்மதம் தெரிவித்திருக்கிறது. — இவை உண்மையானால், நமது மத்திய அரசு பலத்த கண்டனத்துக்கு உரியதாகிறது.

இந்தியத் தொழிலதிபர்கள் ஈழத்தில் முதலீடு செய்தால் அங்கு நமக்கு ஒரு சுயநல நோக்கு உருவாகிவிடும் என்றும், பெரும்பாலும் வட இந்தியத் தொழிலதிபர்களே ஸ்ரீலங்காவில் முதலீடு செய்ய முன்வருவார்களாதலால் தமிழகத்துக்கும் வடமாநிலங்களுக்கும் இடையில் பிளவு உண்டாகவே செய்யும் என்றும் சரியாகக் கணித்துப் பேசியுள்ளார் நெடுமாறன்.

தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின் திட்டத்தை நிராகரித்துவிட்ட ஜெயவர்த்தன பேச்சு வார்த்தை, சமரசம் ஆகியவற்றில் தமக்கு நம்பிக்கை இல்லை என்பதை வெட்ட வெளிச்சமாக்கியிருக்கிறார். பேச்சு வார்த்தைகளுக்கு ஈழப் போராளிகளின் போக்கு அனுசரணையாக இல்லை என்றாலும், அமிர்தலிங்கம் கட்சி நல்லவிதமாக ஒத்துழைப்பு அளித்து வந்தது. இப்போது அதன் யோசனைகளும் ஜெயவர்த்தனவால் நிராகரிக்கப்பட்டு விட்டன. அதுமட்டுமின்றி, 'பிரச்னைக்கு ராணுவத் தீர்வு ஒன்றே சாத்தியம்' என்கிற ரீதியில் கூறியதன் மூலம் சிங்கள வெறியர்களிடமும், ஸ்ரீலங்கா ராணுவத்தினரிடமும் தாம் கைப்பாவையாகிவிட்டிருப்பதையும் உணர்த்தியிருக்கிறார் ஜெயவர்த்தன. அதே வார்த்தைகளைப் பாரத அரசு திரும்பிச் சொல்லுமானால் ஈழத்தின் கதி என்ன? ஜெயவர்த்தன யோசிக்க வேண்டும்.

நாளுக்கு நாள் சிங்கள ராணுவத்தின் அக்கிரமங்கள் அதிகரித்து வருகின்றன. விடுதலைப்புலிகளை மட்டுமின்றி இதர அப்பாவித் தமிழர்களையும் கொடுமைப்படுத்தியும், கொன்று குவித்தும் வருகிறது ஸ்ரீலங்கா ராணுவம். மேலும், அதன் அத்துமீறிய செயல்கள் குறிப்பிட்ட பிரதேசங்களிலன்றி இதுவரை அமைதியாக வாழவிடப்பட்ட தமிழர்கள் வசிக்கும் பகுதிகளுக்கும் படிப்படியாகப் பரவி வருகிறது. மட்டக்களப்பு மாவட்டத்தில் சமீபத்தில் ஹிந்து கோவில்களிலும், கிறிஸ்தவ தேவாலயங்களிலும் கூட ராணுவத்தினர் புகுந்து அங்கு பிரார்த்தனை செய்து கொண்டிருந்தவர்களையும், மதகுருமார்களையும் அடித்து நொறுக்கியும், கைது செய்தும், கொன்று குவித்தும் இருக்கின்றனர். இவையெல்லாம் 'ஹிட்லரின் நாஜிப்படை கூட இன்னும் சற்று மனிதாபிமானத்துடன் நடந்து கொண்டது' என்று எண்ணும்படி செய்கின்றன. இந்த வெறித்தனங்களைக் கட்டுப்படுத்தி நாகரிக அரசு நடத்த ஜெயவர்த்தனவால் முடியவில்லை என்பது நிரூபணமாகி விட்டது.

இந்த நிலையில் ஈழத் தமிழர்களைக் காப்பாற்ற வேண்டிய பெரும் பொறுப்பும், கடமையும் பாரதத்துக்கு இருக்கிறது. பேச்சு வார்த்தைகள் மூலம் இதைச் சாதிக்க முடியுமா என்பது இன்று பெரிய கேள்விக்குறியாகிவிட்டது. பண்டாரியின் பயணத்தை ஒத்திப் போட்டது ஈழத்துக்குப் பாடம் புகட்டிவிட்டதாகாது. மாறாக, அதைத் தமது மற்றொரு வெற்றியாக எண்ணி ஜெயவர்த்தன திருப்திப் புன்னகை புரிந்து கொண்டிருப்பார். ராணுவ நடவடிக்கையை நமது பிரதமர் வெறுப்பாரேயானால், நெடுமாறன் கூறுவதுபோல் குறைந்த பட்சம் உலக நாடுகளின் பொருளாதார பகிஷ்காரத்துக்காவது இந்தியா முன்னின்று முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

# அ.இ.அ.தி.மு.க. அமைச்சரவையில் அதிகம் லஞ்சம் வாங்குவது யார்?

நீங்கள் கேட்டவை — தராசு

* ரமேஷ், சென்னை—41.

? ராமாஸ்வரூப், குற்றவாளிகள் பட்டிய லில் தன் பெயரைச் சொல்லியிருப்பதா லேயே சந்திரகர் ராஜினாமா செய்துள்ளார். ஆனால் ராயின் மெய்ன் விவகாரத்தில் சந்தி சிரித்த பிறகும் காளிமுத்து பதவியில் நீடித்துக் கொண்டிருக்கிறாரே?





*தராசின்.....

..... கணிப்பு

* 'இவரைக் காணப்.....

..... போகாதீர்கள்!'





! சந்திரகரும்தாமாகவேராஜினாமாசெய்து விடவில்லை. ராஜினாமா செய்யும்படி பிரதம ரால்கேட்டுக்கொள்ளப்பட்டார். அதுபோல இங்கும் காளிமுத்துவை முதல்வர் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் நம் முதல் வர் எம்.ஜி.ஆர். இதுபோன்ற விஷயங்களில் பேசும் சக்தியை அறவே இழந்துவிட்டிருரே!

* மா. அய்யப்பன், நாட்டரசன்கோட்டை.

? 'சங்கீதம்' — சிறு விளக்கம் தேவை!

! ஒழுங்குபடுத்தப்பட்ட ஓசை.

* ஆர். இளங்கோ, ஏந்தல்.

? 'மார்க்ஸிஸம், லெனினிஸம், இணைக்கப் பட்டிருப்பது போல அண்ணாயிஸத்துடன், எம். ஜி. ஆரிஸமும் இணைக்கப்பட வேண் டும்' என்று ராகவானந்தம் கூறியிருக்கிறாரே?

! முதலில் வீரப்பனிஸத்தையும், ஜெய லலிதாயிஸத்தையும் எம்.ஜி. ஆரிஸத்தோடு இணைத்து கோஷ்டி பூசலை ஒழிக்க ஒரு வழி சொல்லட்டும். பிறகு அண்ணாயிஸத்துக்கு வருவோம்.

* டி. விஜயகுமார், கொப்பம்பட்டி.

? 'பெண் புத்தி பின்புத்தி' என்பது பெண் களின் புத்தி 'பின்' (ஊசி) போன்று கூர்மை யுடையது என்கிற அர்த்தத்தில்தானமே! உண்மைதானா?

! சபாஷ், நண்பரே சபாஷ்! அதுவும் சாதாரண 'பின்' அல்ல; ஸேஃப்டி பின் என்று கஞ்சத்தனமில்லாமல் கூறுவீர்களா னால் இன்னும் அதிகமாகவே பெண் குலத்தை மகிழ்விக்கலாம்.

* பெ. சங்கரபாண்டியன், பொய்கை.

? சட்டசபையில் ஒரு முதல்வர் பேசியே தீரவேண்டும்என்றகட்டாயம்ஏதும்உண்டா?

! பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ளும் போதுகூட ஒரு முதல்வர் பேச வேண்டிய அவசியமில்லை என்பதற்கே முன் உதாரணம் இருக்கிறது ஸ்வாமி!

* எஸ். சந்திரசேகரன், திருச்சி—4.

? தவத்திரு குன்றக்குடி அடிகளார், திருமுருக கிருபானந்தவாரியார் — இருவரையும் பற்றித் தராசின் கணிப்பு யாதோ?

! பின்னவர் வெறும் ஆன்மிகவாதி. முன்னவரோ அரசியல்—கம் ஆன்மிகவாதி.

* ஆர். விஜயராஜ், பெரியகுளம்.

? அ. இ. அ. தி. மு. க. அமைச்சர்களில் அதிகம் லஞ்சம் வாங்குவது யார்?

! ஆக, அனைவரும் லஞ்சம் வாங்குகிறார்கள் என்று கண்டுபிடித்துவிட்டீர்கள். அதில் யார் அதிகம் வாங்குகிறார்கள் என்பது மட்டும்தான் தெரிய வேண்டுமாக்கும்!

* ஸ்ரீ பட்டாபிஷேகப்ரியன், குடியாத்தம்.

? 'இந்துமதத் தலைவர்கள், மடாதிபதிகள் யாரும் போப்பைச் சென்று சந்திக்க வேண்டாம்' என்று சுவாமி சின்மயானந்தா கோரிக்கை விடுத்திருந்தாரே, படித்தீரா?

! படித்தேன். நம்மைச் சந்திப்பதற்காகப் போப் தானே வாட்டிகனிலிருந்து இந்தியாவுக்கு வந்திருந்தார். வந்திருக்கும் ஒருவரை வரவேற்றுப் பேசி உபசரிப்பதுதானே பண்பாடு. அவ்வாறிருக்க, புறக்கணிப்பது, கிண்டல் செய்வது என்பதெல்லாம் சின்மயானந்தாவுக்கோ, அவர் பெயரைப் பயன்படுத்தி விளம்பரம் செய்த விசுவ ஹிந்து பரிஷத்துக்கோ பெருமை சேர்க்கவில்லை. சில காலத்துக்கு முன்பாக இஸ்லாமுக்கும், கிறிஸ்தவ மதத்துக்கும் உள்ள ஒற்றுமைகளை வலியுறுத்த வாட்டிகனில் மாநாடு கூட்டிய போப், தாம் பிற மதங்களையும் மதிப்பதை தமது செயல்கள் மூலம் அவ்வப்போது நிரூபித்து வருகிறார். ஹிந்து மதத்தைச் சேர்ந்த நாமும் துவேஷத்தை வளர்க்கும் 'நெகடிவ்' அணுகுமுறையை விட்டுவிட்டு ஆக்கபூர்வமாகச் செயல்படுவது நல்லது. ஆத்ம பரிசோதனை — நம்மிடம் உள்ள குறைகளைக் களைதல்; ஏழைகளின் துயர் துடைத்தல்; ஹிந்து மதத்தின் உயர்வைப் பிரசாரம் செய்தல் — இவையே பலன் தரும்.

* ஆர். நாகராஜன், செம்பனூர்கோவில்.

? அண்ணாதுரையும், காமராஜரும் நமது இப்போதைய அரசியல் தலைவர்களின் கனவில் வந்தால் எப்படியிருக்கும்?

! இவர்களில் யாரும் அவர்களைப் பற்றி நினைப்பதுகூட இல்லை. நினைவிலேயே இல்லாதவர்கள் கனவில் வருவார்களா என்பது சந்தேகம். அப்படியே வந்தாலும் நம்மவர்களால் அவர்களை அடையாளம் கண்டு கொள்ளக்கூட முடியாது. அல்லது 'ஐயோ! நீங்கள் கனவில் வந்து கூடவா எங்களுக்குத் தொந்தரவு கொடுக்க வேண்டும்?' என்று விரட்டியடித்துவிடுவார்கள்.



* பயங்கரவாதத்துக்கு ஆதரவு



* சரியான ஜோடி?

* எஸ். பி. இராஜேந்திரன், முகிலன்விளை.

? உலகத்தில் தேசியக் கொடியோ, தேசிய கீதமோ இல்லாத நாடுகள் உண்டா?

! தேசியக் கொடியையும், தேசிய கீதத்தையும் மதிக்காத மக்களைக் கொண்ட நாடுகள் தான் உண்டு. உதாரணத்திற்கு இந்தியா.

* வண்ணை கணேசன், சென்னை—11.

? ஜெயஸ்ரீக்குச் சரியான ஜோடி கிடைமாதா?

! இப்படியொரு கேள்வி கேட்டுத்தான் மோகனையும், பாண்டியனையும் கேவலப் படுத்த வேண்டுமா என்ன?

* ஆர். சித்ரா, அல்லூர். *

? லிபியாவுக்கும் அமெரிக்காவுக்கும் ஏற்பட்ட மோதல் பற்றி...?

! வியன்னா, ரோம் விமான நிலையங்களில் தாக்குதல் நடத்தி பத்தொன்பது பேர் மரணமடையவும் நூறு பேர் காயம் அடையவும் காரணமாயிருந்த பாலஸ்தீனியர்களுக்கு லிபியா உதவியது என்பது நிதர்சன உண்மை. ஆனால் இதற்குப் பழி வாங்க அமெரிக்கா தன் கடற்படை, விமானப் படை ஆகியவற்றின் பலத்தைக் காட்டி லிபியாவை அச்சுறுத்தப் பார்த்தது அசட்டுத்தனம். எப்படியும் அமெரிக்கா தாக்குவதற்குத் துணியாது என்ற தைரியத்தில் கடாஃபி அமெரிக்காவின் 'ஆறாவது கடற்படையைச் சந்திக்கப் போகிறேன்' என்றும், 'வெள்ளை மாளிகைக்குத் தற்கொலைப் படையை அனுப்புவேன்' என்றும் மார்தட்டுகிறார். இந்த வாய்ச் சவடால்தான் மக்களைக் கவரும் என்பதால் அமெரிக்காவுக்கும், ரேகனுக்கும் தலைகுனிவே ஏற்பட்டது. "(பழிக்குப் பழி) கண்ணுக்குக் கண் என்ற கொள்கை உலகில் அனைவரையும் குருடாக்கிவிடும்'' என்றார் காந்திஜி. அன்பு மார்க்கம் ஒன்றுதான் பயங்கரவாதிகளைக்கூட வழிக்குக் கொண்டு வரும் என்று பலமுறை நிரூபணமாயிருக்கிறது.

---

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

ஆர். சித்ரா,
2-14, அக்ரஹாரம்,
அல்லூர் — 620 101. (திருச்சி)

## தானம் கொடுப்பதின் பலன்

1. மனு: ஜலம் கொடுப்பவன் த்ருப்தியையும், அன்னம் கொடுப்பவன் குறைவில்லா சுகத்தையும், எள்ளு கொடுப்பவன் நல்ல ஸந்ததியையும், தீபம் கொடுப்பவன் நல்ல கண்ணையும், பூமியைக் கொடுப்பவன் பூமியையும், தங்கம் கொடுப்பவன் தீர்க்கமான ஆயுஸ்ஸையும், வீடு கொடுப்பவன் உயர்ந்த வீடுகளையும், வெள்ளி கொடுப்பவன் உயர்ந்த ரூபத்தையும், வேஷ்டி கொடுப்பவன் சந்திரலோகத்தையும், காளை மாடு கொடுப்பவன் அகண்ட ஐஸ்வர்யத்தையும், கோ கொடுப்பவன் ஸூர்யலோகத்தையும், வண்டி படுக்கை கொடுப்பவன் அழகான பத்னியையும், அபய தானம் கொடுப்பவன் தனத்தையும், தான்யம் கொடுப்பவன் சாச்வதமான சௌக்யத்தையும், வேத தானம் (வேதம் சொல்லிக் கொடுப்பது) செய்கிறவன் ப்ரம்மலோகத்தையும் அடைவான். அந்த அந்த தானத்திற்குத் தகுந்தபடி பலன் கூறப்பட்டுள்ளது.

2. எல்லா தானத்தைக் காட்டிலும் வேத தானம் — வேதம் சொல்லி வைப்பது — உயர்ந்தது.

தானம் யாருக்கும் செய்யலாம்; ஆனால் பாத்திரம் காலம் இவைகளை அனுசரித்து பலன் அதிகம். கலியில் தானத்திற்கு மகிமை அதிகம். ச்ரத்தையுடன் தானம் செய்ய வேண்டும்.

(ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரம்)

மேலும் சகல சௌபாக்கியமும் கிடைக்க எமது கிராண்ட் ஸ்வீட்ஸ்களையே வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

**24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை—600 020 போன்: 412557.**

# வரதட்சணையை எதிர்த்து ஒரு பேரோட்டம்!

இந்தியாவைச் சுற்றி ஓட்டமும் நடையுமாக வந்து கொண்டிருக்கிறார் ஹரி பிரசாத் ஷெட்டி. வயது 25. டெல்லியைச் சேர்ந்த இளைஞர். இரண்டரை வருஷங்களாகத் தொடர்ந்து ஓடிக் கொண்டேயிருக்கிறார். எதற்கு? அது ஒரு கதை! சோகமான உண்மைக் கதை!

"டெல்லியிலுள்ள என் உறவுக்காரர் வீட்டில் தங்கிக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். இரண்டு வீடு தள்ளி வசித்து வந்தாள் ஒரு பெண். இருபத்தோரு வயது அழகி. கல்யாணத்தின்போது அவள் வீட்டார் 60,000 ரூபாய் வரதட்சணை கொடுத்தார்கள். கல்யாணமாகி, கணவன் வீட்டுக்கு வந்தபின்பும், அதைக் கொண்டு வா இதைக் கொண்டு வா என்று துன்புறுத்தினார்கள். ஸ்கூட்டர் கேட்டார்கள். இவர்களால் வாங்கித் தர முடியவில்லை. வழக்கப்படியே ஸ்டவ் வெடித்தது என்றார்கள். தீயில் விழுந்து போன அந்தப் பெண்ணை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனோம். டாக்டர்களால் பிழைக்க வைக்க முடியவில்லை. சாகும்போது உண்மையைச் சொல்லிவிட்டாள். அப்போது என் மனசில் தோன்றின வெறிதான். என்னை இப்படி ஓட்டமும் நடையுமாக இந்தியாவைச் சுற்றி வந்து வரதட்சணைக்கு எதிரானதொரு பிரசாரப் பணியை நடத்தச் செய்தது" என்றார் ஷெட்டி.

முன்பெல்லாம் தினமும் ஐம்பது, அறுபது கி.மீ. தூரம் நடப்பாராம். ஆனால் வெகு தூரம் ஓடியதில் கிட்னி ப்ராப்ளம் ஏற்படவே, இருபத்தைந்து, முப்பது கி.மீ.க்கு மேல் நடக்க வேண்டாம் என்று ஒரு டாக்டர் அட்வைஸ் செய்துள்ளாராம்.

இதுவரை பல்வேறு மாநிலங்களில் சுமார் 22,000 கி.மீ. ஓடியிருக்கிறார். இந்தப் பயணத்தில் இப்போது இவர் உபயோகிக்கிற ஷூக்கள் 28வது ஜோடி; டிராக் ஸூட் 7 வது. முதுகில் மாட்டிக் கொள்கிற பை 15வது. டெல்லியிலிருந்து புறப்படுகையில் இவரது எடை 63 கிலோ. சென்னையில் 53 கிலோ. ஸ்டிரிக்ட் வெஜிடேரியன். கையில் தேசியக் கொடியைப் பிடித்துக் கொண்டு ஓடுகிறார்.

இவரது பயணத்தில் சுமார் 800 கல்லூரிகளிலும் மற்றும் பல இடங்களிலும் இளைஞர்களைச் சந்தித்து வரதட்சணைக் கொடுமை பற்றி விளக்கிப் பேசி இருக்கிறார். ஏறத்தாழ 30,000 பேர்கள் இவரிடம் வரதட்சணை



வாங்காமலும், கொடுக்காமலும் திருமணம் செய்து கொள்வதாய் உறுதி மொழி கொடுத்துள்ளனர். வரதட்சணை இல்லாமல் பதினொரு திருமணங்களையும் நடத்தி வைத்திருக்கிறார்!

இன்னும் இவர் பயணம் செய்யாத மாநிலங்களான அந்தமான், கேரளா, லட்சத்தீவுகள், கோவா, மகாராஷ்டிரா, குஜராத், ராஜஸ்தான் இங்கெல்லாம் போய்விட்டு, 87 ல் மறுபடியும் டெல்லிக்கு போய்ச் சேர்வாராம். இதுபோன்று, ஒரு சமூக நலன் கருதி, இத்தனை நீண்ட தூரம் ஓடுபவர் உலகத்திலேயே இவர் ஒருவராகத்தான் இருக்க முடியும்.

"பஞ்சாபில் ஓடிக் கொண்டே இருந்த போது, தீவிரவாதிகளிடம் சிக்கிக் கொண்டேன். என்னைப்பற்றியும், என் நோக்கத்தைப் பற்றியும் சொல்லி முடித்ததும், 'நீயும் எங்களைப் போலவே ஒரு புரட்சிக்காரன்தான்! நீயும் எங்களைப் போல் துப்பாக்கி வைத்துக் கொண்டு, வரதட்சணை வாங்குபவர்களைச் சுட்டுப் பொசுக்க வேண்டும்' என்று கூறி முதுகில் தட்டிக் கொடுத்ததுடன், டீ, பிஸ்கட் எல்லாம் கொடுத்து அனுப்பி வைத்தார்கள்".

ஷெட்டியின் வேறு சில ரசமான அனுபவங்கள் :

"காஷ்மீரிகளில் பலர், 'என்ன இந்தியாவிலிருந்தா வருகிறாய்?' என்று அந்நிய நாட்டவரைக் கேட்பதுபோல் கேட்டது என்னை ஆச்சரியப்படுத்தியது.

"உத்திரப்பிரதேசததில் என்னை ஏழு திருடர்கள் வழி மறித்தனர். நான் என்னைப் பற்றின எல்லா விவரங்களையும் சொல்லியதும், என்னிடமிருந்து பறித்தவற்றைத் திருப்பிக் கொடுத்ததோடு அவர்களாகவே ஆளுக்குக் கொஞ்சம் பணம் போட்டு ஐம்பத்தைந்து ரூபாய் கொடுத்து 'பத்திரம்! யாராவது திருடிக்கொண்டு போய்விடப் போகிறார்கள்' என்று எச்சரித்து அனுப்பினார்கள்.

"அஸ்ஸாமில் நான் நுழைநதபோது, கிளர்ச்சி தீவிரமாய் இருந்த நேரம். தேசியக் கொடியை, காங்கிரஸ் கொடியாய் நினைத்துக் கொண்டு, என்னைச் சில இடங்களில் கல்லால் அடித்தனர்.

"நாகாலாந்து, மிஸோராம், அருணாசலப் பிரதேசம், மேகாலயா இங்கெல்லாம் வரதட்சணைக் கொடுமையே இல்லை என்று அங்கே போனபோதுதான் அறிந்து கொண்டேன். மனத்துக்கு சந்தோஷமாய் இருந்தது.

"பீகாரில் வரதட்சணைக் கொடுமையின் உச்சநிலை நீடிக்கிறது. அங்கு ஓர் இளைஞன் தன் வீட்டிற்கு என்னை அழைத்துப் போனான். சாப்பிட உட்கார்ந்ததும் என்னை அவன் அம்மாவிற்கு அறிமுகம் செய்தான். திடீரெனப் பரிமாறுவதை நிறுத்திவிட்டு அவர், 'என் மகனுக்குக் கல்யாணம் நிச்சயமாயிருக்கிறது. ரூபாய் 40,000 டௌரி. நீ இங்கிருந்தால், அவன் மனசை மாற்றி, எங்களுக்கு வரவிருக்கிறதைத் தடுத்துவிடுவாய்! உடனே போய்விடு' என்று துரத்திவிட்டார். இந்த இழிநிலை கண்டு இடிந்து போய்விட்டேன்.

"சில பீகார் கிராமங்களில் பெண் குழந்தை பிறந்த உடனே, உப்பை அள்ளி வாயில் கொட்டி, கொடூரமான முறையிலே கொலை செய்கிற பழக்கம்கூட, வழக்கத்தில் இருப்பதாய்த் தெரிந்து கொண்டபோது, மனம் துடியாய்த் துடித்தது.

"ஆந்திரப் பிரதேசத்தில்தான் மிக அதிகமான தொகை டௌரியாய்த் தரப்படுகிறது. ஒரு புள்ளி விவரப்படி இந்தியாவில் இரண்டு மணி நேரத்துக்கு ஒரு வரதட்சணைக் கொலை நடக்கிறது. இதில் 72 சதவீதம் வடக்கே!" என்கிறார் ஷெட்டி.

சந்திப்பு: **மௌஷ்மி**

படம்: **யோகா**

---

# பிக் பாக்கெட்டா?

வாசகர் குமுறல்

**நா**னும் எனது சிறிய தகப்பனரும், எனது பாட்டியுமாக மூன்று பேர், திருவண்ணு மலையிலிருந்து மயிலாடுதுறைக்கு, சிறிது எவர்சில்வர் பொருட்களுடன் வேலூரி விருந்து வேளாங்கண்ணிக்குச் செல்லும் 'பட்டுக்கோட்டை அழகிரி' பேருந்தில் சென் ருேம். ரூ 100 கொடுத்து, கண்டக்டரிடம் டிக்கெட் கேட்டபோது, 'லக்கேஜுக்கும் கட்டணம் உண்டு' என்று சொல்லி, மூன்று டிக்கெட்டுகளே மட்டும் கொடுத்துவிட்டு, மீதி சில்லறையைப் பிறகு தருவதாகக் கூறி விட்டு உடனே அப்பால் சென்றுவிட்டார். பிறகு எங்களிடம் வந்தபோது, 'லக்கேஜுக்கு டிக்கெட் கொடுங்கள்; என்று கேட்டதற்கு, 'தருகிறேன்' என்று சொல்லிச் சென்றுவிட் டார். பிறகு மயிலாடுதுறை வந்தபோது ரூ 40 மட்டும் கொடுத்துவிட்டுக் கீழே இறங் கிச் சென்றுவிட்டார். கடைசிவரை லக் கேஜுக்கு டிக்கெட் கொடுக்கவேயில்லே! இப்படியும் ஒரு கொள்ளேயா? இதை 'பிக் பாக்கெட் என்பதா, பஸ் பாக்கெட் என் பதா?'

— அ. முஹம்மது நிஜாமுத்தீன், நீடூர்.

### ஆபீஸ்நேரத்தில்எங்குதான் போவார் களோ?

சென்னே சென்ட்ரல் ரிஸர்வேஷன் ஆபீ ஸில் இரண்டாவது மாடியிலுள்ள முதல் வகுப்புப் பகுதிக்குச் செல்லும் பொது மக்கள் மாடிப்படிஏறித்தான் செல்லவேண்டு மாம். அங்கு இருக்கும் மின்தூக்கி (லிப்ட்) 3 வது, 4 வது மாடியிலுள்ள ரயில்வே ஊழியர் கள் வசதிக்காம். இந்தமாதிரி ஒரு அறிவிப்பு போர்டு இல்லாவிட்டாலும் மின்தூக்கி இயக்குனர் பொதுமக்களே அனுமதிப்ப தில்லே. நான் சென்றபோது காலே 11 மணி அளவில், மின்தூக்கி பிஸியாக இருந்தது. அந்த ஆபீஸ் நேரத்தில் ரயில்வே ஊழியர் கள் எங்குதான் கூட்டம்கூட்டமாகச் சென்று வருகிருர்களோ! டிக்கெட் வாங்குபவர் களுக்கு மின்தூக்கி வசதி செய்து தராத ரயில்வே, ரிஸர்வேஷன் காம்பிளக்ஸை இரண்டாவது மாடியில் வைப்பானேன்? என்னைப் போன்ற வயதானவர்கள் அவதிப் படட்டும் என்ருே?

அங்கேயே இன்னெரு அதிசயமும் கண் டேன். சிறுநீர் கழிக்க 10 பை. மலஜலம் 25 பை என்று கழிப்பிடத்தில் கட்டணம் வாங்குகிருர்கள். இது அக்கிரமம். காக கொடுக்க மனம் வராத கஞ்சனில்லே நான். ஆனல் வேறு எந்த ரயில்வேயிலும் சிறுநீர் கழிக்கக் கட்டணம் வாங்குவதில்லே. மேலும், பயணிகள் வசதிகளுக்கு என்று ரயில்வே நிர்வாகம்கோடிக்கணக்கான ரூபாய் ஒதுக்கு கிறது. எனவே இப்படிக் கட்டணம் வசூலித்து நிர்வகிப்பது விதிகளுக்குப் புறம்பானது.

— எஸ்.பி.எஸ். சென்னே—5.

### பக்தியிருந்தும் சுத்தம் இல்லேயே!

தை வெள்ளிக்கிழமை ஒரு கோவிலுக்குச் சென்றிருந்தேன். திரையிடப்பட்டுவிட்ட தால், சுவாமி தரிசனத்துக்காகக் காத்திருந் தேன். சுவாமி நைவேத்யத்துக்காகப் பிர சாதங்கள் எடுத்துச் சென்றனர். மிகுந்த பக்தியுடன் கடவுள் கைங்கர்யத்தை அக்கறை யுடன் செய்யும் இவர்கள் பிரசாதங்களே மூடிக் கொண்டு வரப் பயன்படுத்தும் துணியைமட்டும்ஏன் இவ்வளவு அசுத்தமாக வைத்துள்ளார்கள்? அநேகமாக எல்லாக் கோவில்களிலும் இதே நிலேதான். பார்க் கவே அருவருப்பாகவும் மனத்துக்கு வேதனே யாகவும் இருக்கிறது.

— பு. என். லக்ஷ்மி, சென்னே—84.

### தவருன தலேப்பு!

வாசகர் சம்பத்குமார் இறப்பு மற்றும் வாரிசு சான்றிதழ்களேப் பெற, சம்பந்தப் பட்டவர்களேக் கவனிக்கும் விஷயத்தில் செலவாகும் ரூ 150/—க்குக் குறையாமல் என்றுதான் எழுதியிருக்கிருர். ஆனல் "வங்கியில் ரூ 100 பெற செலவு ரூ 150" என்ற தங்கள் தலேப்பு, வங்கிக்கு ரூ 150 கொடுத்தால்தான் ரூ 100 டெபாசிட்டைத் திரும்பப் பெறமுடியும் என்று உணர்த்துவது போல் இருக்கிறது. இது என் போன்ற வங்கி ஊழியர் மனத்தைப் பெரிதும் புண்படுத்துவ தாக உள்ளது.

— அ. கிருஷ்ணமூர்த்தி, சேரன்மகாதேவி.

# பஸ் பாக்கெட்டா?

காலை மணி ஏழு.

பஸ்ஸர் இரண்டு முறை ஒலித்துவிட்டு அலுத்துக் கொண்டது.

காயத்ரி எழுந்து வந்து கதவைத் திறந்தாள்.

வெளியே —

தேவ் நின்று கொண்டிருந்தான்.

அவளுக்கு ஒரே வியப்பு!

''வாடா தேவ்.''

உள்ளே வந்தான்.

அவன் கையிலிருந்த சூட்கேஸை வாங்கிக் கொண்டு முன்னே நடந்தாள் காயத்ரி.

அறைக்குள் நுழைந்து சூட்கேஸை மேஜைமேல் வைத்துவிட்டுத் திரும்பியவள், ''ஊரில் அப்பா, அம்மா...'' என்று முடிப்பதற்குள், அவன் முந்திக் கொண்டு பதில் சொன்னான்.

''எல்லாரும் நல்லா இருக்காங்க, அக்கா''

''திடீர்னு வந்திருக்கியே, ஏதாவது விசேஷம்...?''

''இல்லேக்கா. உன்னையும் அத்தானையும் பார்த்துட்டுப் போகலாம்னுதான் வந்தேன்'' என்ற தேவ், ''அத்தான் இல்லையா?'' என்று கேட்டான்.

''இல்லே. திருச்சி போயிருக்கார். சாயந்திரம் திரும்பிடுவார்...'' என்ற காயத்ரி, ''போய்ப் பல் விளக்கிட்டு முகம் கழுவிட்டு வா. டிபன் சாப்பிடலாம்'' என்றாள்.

# நீதான் அக்கா வாங்கித்

தேவ் பாத்ரூமை நோக்கி நடக்க, காயத்ரி அடுக்களையை நோக்கித் திரும்பினாள்.

தேவ்!

அவளுடன் பிறந்த ஒரே தம்பி. அவளை விட ஐந்து வயது தாமதமாகப் பிறந்தவன்.

கல்லூரிப் படிப்பை அவசர அவசரமாக முடித்துவிட்டு, மலையளவு எதிர்பார்ப்புகளுடன் பட்டத்தை வாங்கிக் கொண்டு, கடந்த ஐந்து ஆண்டுகளாக வேலை தேடிப் பேயாய் அலைந்து கொண்டிருந்தான்.

திடீரென்று தேவ் இப்போது இங்கே எதற்காக வந்திருக்கிறான்?

காயத்ரிக்குப் புரியவில்லை.

சூடான இட்லியைத் தட்டில் எடுத்து வைத்த காயத்ரி கேட்டாள்: ''எங்களைப் பார்த்துட்டுப் போக வந்தேன்னு நீ சொல்றது பச்சைப் பொய்யின்னு எனக்குத் தெரியும். எங்கே வந்தே? சொல்.''

கேட்ட அக்காவை நிமிர்ந்து பார்த்தான் தேவ்.

பின், ''உண்மைதான் அக்கா'' என்றவன், ''ஒரு இண்டர்வியூவுக்கு வந்தேன்'' என்றான் நிதானமாக.

''அப்படியா?'' என்று வியப்போடு கேட்டாள் காயத்ரி.

இவனும் இதுவரை எத்தனையோ பேட்டிகளுக்குப் போய் வந்திருக்கிறான்.

ஒவ்வொருவருடமும் குதுப்மினார் எத்தனை மில்லி மீட்டர் சாய்ந்து கொண்டு வருகிறது என்பது முதல், எம். ஜி. ஆர். நடித்த முதல் படம் என்ன என்பது வரை எத்தனை கேள்விகளுக்குப் பதில் சொல்லியிருப்பான்?

ஆனால், வேலை?

ஊஹூம்!

இந்த வேலையாவது இவனுக்குக் கிடைக்குமா?

''ஆமாம் அக்கா. போன மாசம் அப்ளை பண்ணினேன். நாளைக்குப் பேட்டிக்கு வரச் சொல்லிக் கடிதம் வந்திருக்கு. புறப்பட்டு வந்துட்டேன்...''

''என்ன வேலை?''

''உதவி காஷியர் வேலைன்னு பேப்பர்லே போட்டிருந்தான்.''

''சம்பளம் எவ்வளவு?''

''அறுநூத்தி ஐம்பது ப்ளஸ் படி. அந்த ப்ளஸ் படி எவ்வளவுன்னுதான் தெரியலே'' என்ற தேவ், ''ஆனால்...'' என்று கூறிச் சற்றே தயங்கினான்.

''ஆனால், என்னடா?''

''வேலைக்கு செலக்ட் பண்ணிட்டாங்கன்னு இரண்டாயிரம் ரூபாய் டெபாஸிட் கட்டணுமாம்.''

''கட்டிடலாம். அத்தான் வந்ததும் விவரமா அவர்கிட்டே சொல்லு. சிபாரிசுக்கு ஏற்பாடு பண்ணிடலாம்.''

''அத்தான்கிட்டே நீயே சொல்லுக்கா.''

''நானா?''

''ஆமாம்.''

''ஏன்?''

''ஏன்னா, இண்டர்வியூ பண்ணப் போறதே அவர்தான்...''

''என்னடா சொல்றே?''

''ஆமாம் அக்கா. அத்தான் மானேஜரா இருக்கிற கம்பெனியிலிருந்துதான் எனக்கு இண்டர்வியூ வந்திருக்கு. இந்த வேலைக்கு என்னை செலக்ட் செய்யறதும் செய்யாததும் அத்தான் கையிலேதான் இருக்கு. நீதான் எப்படியாவது அவர்கிட்டே சொல்லி இந்த வேலையை எனக்கு வாங்கித் தரணும் அக்கா ப்ளீஸ்...!''

''தேவ், அது வந்து...''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது அக்கா... நீ அத்தான்கிட்டே என்ன சொல்வாயோ? எப்படிச் சொல்வாயோ? இந்த வேலை எனக்குக் கிடைச்சாகணும். அதுக்கு நன்றி உபகாரமா, இன்னும் நாலு மாசத்

திலே உனக்குப் பிறக்கப் போற பொண்ணுக்காக நான் இன்னும் இருபது வருஷம் காத்துக்கிட்டு இருப்பேன். அவளை வரதட்சணை எதுவும் வாங்காது கல்யாணம் செய்துவிட்டு, என் நன்றிக் கடனை தீர்த்துடறேன்...''

சொல்லிவிட்டு 'கலகல'வெனச் சிரித்தான் தேவ்.

காயத்ரியும் சிரித்தாள் —

ஒப்புக்காக.

**அ**ன்று இரவு எட்டு மணி இருக்கும்.

தெரிந்த நண்பர் ஒருவரைப் பார்த்து விட்டு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான் தேவ்.

கதவைத்திறந்துகொண்டுஉள்ளே நுழைந்தான்.

அறையிலிருந்து வெளியே வந்த பேச்சுக் குரல் அவன் செவிகளில் தெளிவாகக் கேட்டது.

அத்தான் பிரகாஷ் ஊரிலிருந்து வந்து விட்டார் போலிருக்கிறது.

சற்றே தயங்கி நின்றான் தேவ்.

# தவழும்

## ஜெயவண்ணன்



# காங்கிரஸ் ஆரம்பித்தது யார்?

''இந்தியன் நேஷனல் காங்கிரஸ் யாரால் அமைக்கப்பட்டது?'' என்ற கேள்விக்கு எல்லோரும் அளிக்கும் பதில், ''ஏ.ஓ. ஹ்யூம்'' என்பது. இந்தப் பதில் தவறு என்று கூறுகிறார் 1885ல் பம்பாயில் கூடிய முதல் காங்கிரஸின் தலைவர் உமேஷ் சந்தர பானர்ஜி.

''1884ல் ஹ்யூம் ஒரு திட்டம் போட்டார். அதன்படி பிரபல இந்திய அரசியல்வாதிகள் அனைவரும், வருடத்துக்கு ஒருமுறை ஓர் இடத்தில் கூடி சமுதாய விஷயங்களைப் பற்றி சிநேகபாவத்தில் கலந்து ஆலோசிக்க வேண்டும். அவர்கள் அரசியல் விஷயங்களைப் பற்றிப் பேசக் கூடாது. அரசியலைப் பற்றி ஆராய்ந்து செயல்பட கல்கத்தா, பம்பாய், சென்னை போன்ற நகரங்களில் ஏற்கெனவே பல சங்கங்கள் இருக்கின்றன. இந்த அகில இந்தியக் கூட்டத்திற்கு, எங்கு கூடுகிறதோ, அந்த மாகாணத்தின் கவர்னர் தலைமை வகிக்க வேண்டும்.

''1885 ஆரம்பத்தில் ஹ்யூம் இந்தத் திட்டத்துடன் சிம்லா சென்று கவர்னர்–ஜெனரல் டஃப்ரின் பிரபுவைப் பார்த்தார். டஃப்ரின், 'திட்டம் நன்றாயிருக்கிறது. நான் யோசனை செய்து, மறுபடியும் உம்மைப் பார்க்கிறேன்' என்று சொல்லி அவரை அனுப்பிவிட்டார். சில நாட்கள் கழித்து ஹ்யூமை அழைத்த டஃப்ரின், தன்னுடைய திட்டத்தை விளக்கினார். 'உம்முடைய திட்டம் உபயோகமற்றது. இந்த நாட்டில் இங்கிலாந்தின் பார்லிமெண்டில் இருப்பதுபோல் அரசாங்கத்தைக் கண்டிக்க, இதுவரையில் ஓர் எதிர்க்கட்சி இல்லை. பத்திரிகைகள் ஜனங்களுடைய எண்ணங்களைச் சரியாக எடுத்துச் சொல்வதில்லை. இங்கிருக்கும் ஆங்கிலேயர்களுக்கு தங்களைப் பற்றியும் அரசாங்க விஷயங்களைப் பற்றியும் இந்தியர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள முடிவதில்லை. ஆதலால், அரசாங்கத்தில் என்ன குறைகள் இருக்கின்றன, அரசாங்கம் என்ன செய்ய வேண்டும் என்பதை இந்தியப் பிரமுகர்கள்தான் ஒன்று கூடிக் கட்டிக்காட்ட வேண்டும். இக்கூட்டத்துக்குக் கவர்னர் தலைமை வகிக்கக் கூடாது. ஏனென்றால், அவர் முன்னிலையில் இந்தியர்கள் அரசாங்கத்தின் குறைகளை எடுத்துச் சொல்லத் தயங்குவார்கள். நான் கவர்னர்–ஜெனரலாக இருக்கும் வரையில் நான் இத்திட்டத்தைத் தயாரித்தேன் என்பதும் வெளி உலகுக்குத் தெரியக் கூடாது' என்றார்.

''பிறகு ஹ்யூம் இரண்டு திட்டங்களையும் (டஃப்ரின் பெயரைத் தெரியப்படுத்தாது) இந்தியப் பிரமுகர்களுக்கு விளக்கியபோது டஃப்ரின் பிரபுவின் திட்டமான இரண்டாவது திட்டத்தையே அவர்கள் ஏற்றார்கள். இப்படித்தான் 'இந்தியன் நேஷனல் யூனியன்', 'இந்தியன் நேஷனல் காங்கிரஸ்' என்று மாறி, 1885ல் பூனாவில் கூட வேண்டிய அதன் முதல் கூட்டம் பம்பாயில் கூடியது' என்கிறார் உமேஷ் சந்தர பானர்ஜி.

தகவல்: எம்.எஸ். சீனிவாசன்.

''காயத்ரி, என்ன சொல்றே நீ?'' கேட்டான் பிரகாஷ்.

''உங்க கம்பெனியிலே காலியா இருக்கிற உதவி காஷியர் வேலைக்கு நாளைக்கு இண்டர்வியூ நடக்கப் போகிறதாமே!''

''ஆமாம்.''

''இண்டர்வியூ செய்யப் போறது நீங்க தானே?''

''எஸ். நானேதான்.''

''அந்த இண்டர்வியூவுக்குத்தான் தேவ் ஊரிலிருந்து வந்திருக்கான்.''

''வெரிகுட்'' என்ற பிரகாஷ், ''காயத்ரி, கவலையை விடு. இந்த வேலையை உன் தம்பிக்கே போட்டுக் கொடுத்துடறேன். நாளைக்கே வேலையில் சேரச் சொல்லி ஆர்டர் போட்டுடறேன். போதுமா?'' என்றான் உற்சாகத்துடன்.

''இல்லீங்க...'' என்ற காயத்ரி, ''நான் சொல்ல வந்ததே வேறு...'' என்றாள் தயங்கிக் கொண்டே.

''என்ன சொல்றே, நீ?''

''ஆமாங்க. ரெண்டு நெருங்கின சொந்தக் காரங்க ஒரே இடத்திலே வேலை பார்க்கிறது அவ்வளவு நல்லதல்ல. அதுவுமில்லாம, தேவ்வை நம்பி இவ்வளவு பெரிய பொறுப்பைக் கொடுக்கறதும் எனக்குச் சரியாத் தோணலே. நீங்க எதிர்பார்க்கிற திறமை தேவ்கிட்டே இருக்குன்னு நான் நினைக்கலே. அதனாலே...

''அதனாலே...?''

''இந்த வேலை அவனுக்கு வேண்டாம்.''

''காயத்ரி, நீயா இப்படிப் பேசறே?'' வியப்புடன் பிரகாஷ் கேட்க—

''ஆமாங்க. நான்தான் பேசறேன். நீங்க என்ன செய்வீங்களோ எனக்குத் தெரியாது. என் தம்பிக்கு இந்த வேலை கிடைக்கக் கூடாது...''

தேவ் உறைந்து போய் அப்படியே நின்று கொண்டிருந்தான்.

எந்த அக்கா தனக்குச் சாதகமாகப் பேசி இந்த வேலையை வாங்கிக் கொடுப்பாள் என்று நம்பி வந்தானோ, அந்த அக்கா தனக்கு இந்த வேலையைத் தரக்கூடாது என்று வாதாடுவதைக் கேட்கும்போது....

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்




**போட்டி: 42**

ராஜாஜியின் முதிய பிராயத்தில், சென்னைக்கு வருகிற பிரமுகர்களெல்லாம் மூதறிஞரை வீடு தேடி வந்து தரிசித்து அவருடன் ஐந்து நிமிஷங்களாவது பேசுவதை ஒரு பெருமையாகக் கருதினார்கள். ஒருசமயம் நண்பர் எஸ்.ஒய்.கே. ராஜாஜியைக் காணச் சென்றபோது மூதறிஞர் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். "ராஜாஜி என்ன இந்த நேரத்தில் படுத்திருக்கிறீர்கள்? உடம்பு சரியில்லையா?" என்றுகேட்டார்எஸ்.ஒய்.கே. "இல்லை, களைப்பாக இருக்கிறது. வருவோர் போவோர் அதிகமாகிவிட்டனர். நான்தான் சென்னையின் இரண்டாவது மகாபலிபுரமாகி விட்டேனே!" என்றார் ராஜாஜி.

எஸ். ஒய். கே. இதைக் கேட்டுக் குபீரென்று சிரித்ததுபோல், நீங்களும் ஒரு சந்தர்ப்பத்தில் உங்கள் நண்பரோ, உறவினரோ அதிகாரியோ, ஆசிரியரோ, குழந்தையோ கூறியதைக் கேட்டுச் சிரித்திருப்பீர்களே! அந்தச் சந்தர்ப்பச் சிரிப்பைக் கீழே வெற்றிடத்தில் எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. ஒருவருக்குக் குலுக்கல் முறையில் வி. ஐ. பி. ஸூட்கேஸ். இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பவும். உறையின் மேல்: "சந்தர்ப்பச் சிரிப்பு" என்று குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 3.3.86**

என் பெயர்: ......................

விலாசம்: ......................

......................

ஓ, காட்!

என் அக்கா காயத்ரியா இப்படிப் பேசுகிறாள்?

தேவால் நம்ப முடியவில்லை.

மறுநாள் காலை.

பத்து மணிக்கு தேவை வரச் சொல்லி விட்டு ஒன்பது மணிக்கே பிரகாஷ் புறப்பட்டுப் போய் விட்டான்.

சிறிதுநேரத்தில் சூட்கேஸைக் கையில் எடுத்துக் கொண்டு புறப்பட்டான் தேவ்.

"இண்டர்வியூவுக்குப் போறதுக்கு சூட்கேஸ் எதுக்குடா?"

கேள்வி கேட்ட காயத்ரியை நிமிர்ந்து பார்த்தான் தேவ்.

சூடாக நாலு வார்த்தை கேட்டுவிடலாமா?

வேண்டாம்.

"இண்டர்வியூ முடிஞ்சதும் அப்படியே ஊருக்குப் போறேன்..."

"நேற்றுதான் வந்தே! அதுக்குள்ளே அவசரமா?"

"வேலை முடிஞ்சதும் உடனே புறப்பட்டு வரச் சொல்லி அப்பா சொன்னார். வர்றேன் அக்கா..."

சொல்லிவிட்டுஅவளதுபதிலுக்குக்காத்திராமல் நடக்கத் தொடங்கினான் தேவ்.

எனக்கு இந்த வேலையை வாங்கித் தரக் கூடாது என்று அக்கா சொல்லிவிட்டாள். எனவே எனக்கு இந்த வேலை நிச்சயம் கிடைக்காது. கிடைக்காத வேலைக்காகப் பேட்டிக்கு எதற்காகப் போக வேண்டும்?

பஸ்ஸ்டாண்டைநோக்கிநடக்கத்தொடங்கினான் தேவ்.

காயத்ரி...

அவன் நடந்து செல்வதைப் பார்த்துக் கொண்டே நின்று கொண்டிருந்தாள்.

"தம்பி, உன் அத்தானின் கம்பெனியில் நடக்கும் தில்லுமுல்லுகள் எல்லாம் எனக்குத் தெரியும். வெளிநாடுகளுக்கு ரெடிமேட் துணிகளை அனுப்புவதாகச் சொல்லிவிட்டுச் சிலைகளையும் வேறு பல பொருட்களையும் அவுங்க கம்பெனி கடத்திக்கிட்டு இருக்கிறது உனக்குத் தெரியாது. உன் அத்தானைத் திருத்த நான் எடுத்த முயற்சி எதுவும் பயனளிக்காது தோற்றுப் போயிட்டேன். என்றைக்காவது ஒருநாள் மிஸ்டர் பிரகாஷ் கம்பி எண்ணப் போறதை யாராலும் தடுக்க முடியாது. அந்த நேரத்திலே எனக்கு ஆறுதல் சொல்ல யாராவது இருக்க வேண்டாமா? நீயும் அவரோடு ஜெயிலுக்குப் போயிட்டா அப்புறம் என் கண்ணீரைத் துடைத்துவிட யாருடா இருக்காங்க. வாழ வேண்டிய நீ பிஞ்சிலேயே கருக வேண்டாம். அதனால்தான் அத்தான்கிட்டே அப்படிச் சொன்னேன். என்னை மன்னிச்சுடுடா தேவ்..."

மெல்ல முணுமுணுத்த காயத்ரி கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்து விட்டுக் கொண்டு —

மீண்டும் மீண்டும் அழுதாள்.

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# வி.ஐ.பி.

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச் க்ரீம் (செவ்வின மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

## 29. சமரும் சங்கீதமும்!

நாகபாணன் சுறுவினால் கடிக்கப்பட்டுத் துர்மரணமடைந்துவிட்டார் என்ற நினைப்பில், தனது வெற்றி அர்த்தமற்றதாகி விட்டதென்ற எண்ணத்தில், இதற்கு வீர மாதாவான தனது தாய் என்ன சொல்வாளோ என்ற துன்பத்தில் சிக்கி உணர்ச்சி வசப்பட்ட கௌதமிபுத்ரன், மலையில் சிறிது ஏறித் திரும்பி நோக்கியதும் நிலைமை தலைகீழாக மாறிவிட்டதென்பதைப் புரிந்து கொண்டானென்றால் அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. நதியின் மத்தியப் பகுதியில்குமிழியிட்டுக்குருதியும்நதியின்நீருமாகக் கலந்து செந்நீரைப் பரப்பவிட்ட சமயத்தில் சரேலென்று நாகபாணன் நீர்மட்டத்துக்கு மேலே கிளம்பியதையும், அவன் கையில் பிடித்திருந்த குறுவாளில் ரத்தமும் சதையும் கலந்திருந்ததையும் கவனித்த கௌதமிபுத்ரன் மரணமடைந்தது சுறுவே என்பதையும் சூரனான நாகபாணன் அல்லவென்பதையும் புரிந்து கொண்டதால், நதியின் அந்தப் பகுதியை உற்றுப் பார்த்துக் கொண்டே நின்றான் நீண்டநேரம். இருமுறை நீருக்கு மேல் சுறுவின் பெரியவாலைக் கட்டிப்பிடித்து எழுந்த நாகபாணன் இருமுறை அதன் முதுகுப் பகுதியில் குறுவாளால் திரும்பத் திரும்பக் குத்தினான். பிறகு மீண்டும் நீரில் மூழ்கி அதன் அடிப் பகுதியிலும் அவன் அடுத்தடுத்துக் குத்தியிருக்க வேண்டும். உடலின் இருபுறத்திலும் குத்தப்பட்ட அந்தப் பெரிய சுறு திடீரென நீர்மட்டத்தில் மிதக்கலாயிற்று. ஆயினும் அத்துடன் எழுந்து அதைக் கையால் அணைத்துக் கொண்ட நாகபாணன் மீண்டும் நதியில் அழுந்தத் துவங்கியதைக் கண்டதும் கௌதமிபுத்ரன் தனது மேலங்கியைக் கழற்றிச் சித்தரஞ்சனியிடம் கொடுத்துவிட்டு, "இரு, நான் நாகபாணனைக் கரைக்குக் கொண்டு வருகிறேன். அவன் கை களைத்துவிட்டது. இப்பொழுது உதவாவிட்டால் இறந்துவிடுவான்" என்று கூறிவிட்டு அவள் பதிலுக்குக் காத்திராமல் நதியின் நீரில் குதித்து மூழ்கி நீந்தினான். குதித்தபோதே நாகபாணன் மறைந்த இடத்தைக் குறிவைத்துக் கொண்டானாதலால் அந்தத் திக்கில் வேகமாக நீந்தி அதனருகில் வந்ததும் தலையைத் தூக்கி இருபுறமும் பார்த்தான். மீண்டும் சரேலென மூழ்கி நாகபாணன் அமிழ்ந்த இடத்தை அணுகி அவன் உடலைத் தனது கையில் பற்றி மேல் மட்டத்துக்குக் கொண்டு வந்து அவனை இழுத்துக் கொண்டே எதிர்க்கரையை நோக்கி நீந்திச் சென்றான். கரையை அணுகியதும் தான் கரையிலேறி நாகப்பாணனையும் இழுத்துக் கரையில் கிடத்தினான்.

நாகபாணன் உடலில் பல இடங்களில் சுறுவின் பற்கள் பட்டிருந்ததால் காயம்பலமாயிருந்தது. கையொன்றிலும் தொடைகளிலும் காயங்கள் பலமாயிருந்தன. அந்தக் காயங்களில் கரையிலிருந்த மணல் கலந்ததால் பெரிதும் ஏற்பட்ட எரிச்சல் காரணமாக ஒரு முறை நாகபாணன் முனகினான். பிறகு அசைந்து வேதனை நிறைந்த ஒலிகளை வாயி





லிருந்து எழுப்பினான். கண்டசியாக மெது வாகக் கண்விழித்துப் பார்த்துப் பிரமையடைந்து, ''இது கனவு, கனவுதான்'' என்று சொல்லி மறுபடியும் கண்களை மூடிக் கொண்டான்.

அவன் முகத்தைத் தனது கையொன்றால் துடைத்த கௌதமி புத்ரன், ''மகா க்ஷத்ரபர் அஞ்ச வேண்டியதில்லை. மெள்ள எழுந்திருந்தால் உங்கள் வீரர்களிடம் ஒப்படைக்கிறேன்'' என்று கூறி மெதுவாக அவனை எழுப்பித் தனது கையால் உடலை அணைத்துத் தலையைத் தோளில் சாத்திக் கொண்டு நடக்கலானான். பாதி நடையும் பாதி இழுத்தும் நாகபாணனை அழைத்துச் சென்ற கௌதமிபுத்ரனைக் கோட்டைப் பகுதியிலிருந்து விரைந்து வந்த சுமார் பத்து வீரர்களின் தலைவன், ''மகா க்ஷத்ரபருக்கு என்ன நேரிட்டு விட்டது? இத்தனை காயங்கள் விளைவித்தது யார்?'' என்று வினவினான்.

கௌதமிபுத்ரன் தலையைத் தூக்காமலே நிலத்தை நோக்கிய வண்ணம், ''மகா க்ஷத்ரபருக்கு இத்தனை காயங்களை விளைவிக்கக் கூடியவன் பிறந்திருக்கிறானா? விளைவித்தபின் அவன் உயிருடன்தான் இருக்க முடியுமா?'' என்று கேள்விகளைத் தொடுத்தான்.

வீரர்கள் தலைவன் முகத்தில் குழப்பம் தெரிந்தது. ''அப்படியானால் இந்தக் காயத்தை விளைவித்தவர் யார்? எங்கிருக்கிறார்?'' என்று வினவினான் அவன்.

''நதியின் அடியிலிருக்கிறானோ அல்லது முகத்துவாரத்துக்கு அலைகளால் உருட்டப் பட்டானோ, சொல்ல முடியாது'' என்றான் கௌதமிபுத்ரன்.

''நீ யார்?'' என்று அடுத்த கேள்வியைத் தொடுத்தான் வீரர்கள் தலைவன்.

தலையை நிமிர்ந்து பார்த்த கௌதமி புத்ரன் கேள்வி கேட்ட தலைவனும் மற்ற வீரர்களும் நடை, உடை, தோற்றம் எல்லாவற்றிலும் புதிதாக இருப்பதைக் கண்டு அவர்கள் வெளியூர்களிலிருந்து நாகபாணனால் வரவழைக்கப்பட்டவர்களாக இருக்க வேண்டுமென்று தீர்மானித்தான். ஆகவே சொன்னான்: ''நான் யாரென்பது இப்பொழுது முக்கியமல்ல. முதலில் மகா க்ஷத்ரபரைக் கவனிக்க வேண்டும். இவரைக் கோட்டைக்கு அழைத்துச் செல்ல ஒரு புரவியைக் கொடுங்கள்'' என்றான். வீரர்கள் தலைவன் நாகபாணன் இருந்த நிலையைக் கண்டதும் பதிலேதும் பேசாமல் தன் வீரர்கள் ஒருவனுக்குக் கண்காட்ட அவன் விரைந்து பக்கத்திலிருந்த தோப்புக்குச் சென்று அதிலிருந்து புரவியொன்றை இழுத்து வந்தான். புரவி மீது நாகபாணனை மெதுவாக ஏற்றி அதன் முதுகில் படுக்கவைத்த கௌதமி புத்ரன், ''நாகபாணரை ஜாக்கிரதையாக அழைத்துச் செல்லுங்கள்'' என்று கூறி விட்டுச் சற்றே திரும்பத் தொடங்கினான். அந்தச் சமயத்தில் சுரணை அடைந்துவிட்ட நாகபாணன் சாதவாகனன் தோளைத் தனது கையால் பிடித்தான். அதனால் திரும்பி நோக்கிய சாதவாகனனை உடன் வரும்படி சைகையும் செய்தான். பிறகு வீரர்கள் தலைவனை நோக்கி ஏதோ சைகை செய்ய, மற்ற வீரர்களைச் செல்லும்படி கட்டளை யிட்டான் வீரர்களின் தலைவன். கௌதமிபுத்ரன் வீரர்கள் தலைவனைப் புரவியின் ஒரு புறத்தில் இருக்கச் சொல்லித் தான் மறு பக்கம் வந்து புரவி மீதிருந்த நாகபாணனைப் பத்திரமாகப் பிடித்துக் கொண்டான். அடுத்து அந்தப் புரவி பக்கத்திலிருந்த தோப்பில் நுழைந்தது. தோப்பின் ஊடே சிறிது தூரம் சென்றதும் சற்று வேத்னைப் பெருமூச்சு விட்டான் நாகபாணன். கௌதமி புத்ரன் நாகபாணனை மெதுவாகத் தடவிக் கொடுத்து ரத்தத்தை நிறுத்தச் சில நரம்புகளை அழுத்திவிட்டு மெதுவாகப் புரவியை நடத்திச் சென்றான். இப்படி ஒரு நாழிகை பயணம் செய்ததும் கோட்டையின் பின்புறத் திட்டி வாசல் கதவுக்கருகில் வீரர்கள் தலைவன் நின்று, ''இனி புரவி உள்ளே போக முடியாது. நாம்தான் மகா க்ஷத்ரபரைத் தூக்கிச் செல்ல வேண்டும்'' என்று கூற, கௌதமிபுத்ரன் மெதுவாக நாகபாணனைப் புரவியிலிருந்து இறக்கிப் பாதி உடலைத் தான் பிடித்துக் கொண்டு மீதிப் பாதியை வீரர்கள் தலைவனைப் பிடித்துக் கொள்ளச் சொல்லித் திட்டி வாசல் கதவை இருமுறை தட்டக் கதவு திறந்தது. நாகபாணன் உடலை இருவர் தாங்கி வருவதைக் கண்டதும் திட்டி

## அருள் வாக்கு



**கீ**தையில் க்ருஷ்ண பரமாத்மா இப்படிச் சொல்கிறார்:

என்னை நாலு தினுஸான (சதுர்விதமான) ஜனங்கள் பஜிக்கிறார்கள், அதாவது வழிபடுகிறார்கள். யார் யார் இந்த நாலுவகைக்காரர்கள்? ஒன்று ஆர்த்தன். இரண்டாவது ஜிஞ்ஞாஸு. மூன்றாவது அர்த்தார்த்தி. நாலாவது ஞானி என்கிறார்.

முதலில் சொன்ன ஆர்த்தன் என்பதற்கு 'கஷ்டப்படுகிறவன்', 'துக்கமுற்றவன்' என்று அர்த்தம். மனக் கஷ்டம், சரீரக் கஷ்டம் இவற்றுக்கு ஆளானவன் ஆர்த்தன். வ்யாதி, வலி, தாரித்ரியம் (வறுமை), மாளாத கஷ்டங்கள், ப்ரச்னைகள், மன க்லேசம் தருகிற உபத்ரவங்கள் இவை எல்லாம் ஆர்த்தியில் அடக்கம். இந்தக் கஷ்டம் தீருவதற்காக, துக்க பாரம், துயரச் சுமை தீருவதற்காக இவர்கள் பகவானை வழிபடுகிறார்கள். "அப்பா, இந்த பாரத்தை இறக்கி வையப்பா" என்று ப்ரார்த்தனை பண்ணுகிறார்கள்.

பக்தர்களில் இரண்டாவது வகை யார் என்றால் ஜிஞ்ஞாஸு, அதாவது ஞானப்

வாசல் காவலர் தலைவரமடைய, அவர்களைப் பேச வேண்டாமென்று கௌதமிபுத்ரன் சைகை செய்து வீரர்கள் தலைவன் உதவியால் கோட்டையிலிருந்த மகாக்ஷத்ரபனின் அறைக்கு அவனைக் கொண்டுபோய் அங்கிருந்த கட்டிலில் கிடத்தினான். பிறகு வீரர்கள் தலைவனை நோக்கி, "மகாக்ஷத்ரபர் காயமடைந்திருப்பது யாருக்கும் தெரிய வேண்டாம். மருத்துவம் எனக்குத் தெரியும். சிறிது சுடுநீரும், ஒரு துண்டும், மருத்துவரிடமிருந்து காயக் களிம்பும் கொண்டு வா" என்று உத்தரவிட்டான். அவன் செல்லத் தொடங்கியதும், "அறையை மூடிவிட்டுச் செல். யாரும் நாகபாணரைப் பார்க்க முடியாதென்று திட்டம் செய்து வை" என்று உத்தரவிட்டான்.

அவன் சொற்படி சகலமும் நடந்தது. கதிரவனும் தனது இளங்கதிர் எங்கும் பரப்பினான். கௌதமிபுத்ரன் வீரன் கொண்டு வந்த சுடுநீரால் நாகபாணனின் காயங்களுக்கு ஒத்தடம் கொடுத்தான். பிறகு களிம்பைக் காயப்பட்ட இடங்களில் மெதுவாகத் தடவினான். இருப்பினும் களிம்பு தனது சுபாவத்தைக் காட்டியதால் சற்றே எரிச்சல் எழவே, நாகபாணன் இம்சைப்பட்டு அசைந்தான். இம்சை சுரணையை முற்றும் திரும்பக் கொணர்ந்துவிட்டதால் கண்களை நன்றாகவே திறந்தான். அப்பொழுதும் களிம்பைத் தடவிக் கொண்டிருந்த கௌதமிபுத்ரனை நோக்கிப் புன்முறுவல் செய்தான். கௌதமிபுத்ரன் நாகபாணனைப் பார்க்காமலேயே தனது பணியில் ஈடுபட்டிருந்ததால் எதிரியின் முகத்தில் மாறுபட்டு மாறுபட்டு எழுந்திருந்த உணர்ச்சிகளைக் கவனிக்கவில்லை. களிம்பைப் பூசி முடித்ததும் துண்டில் கைகளைத்துடைத்துக் கொண்டு நாகபாணன் கண்களைத் திறந்திருப்பதைக் கண்டு மனச் சாந்தியை முகத்திலும் புன்முறுவலை உதடுகளிலும் பரவவிட்டுக் கொண்டான்.

நாகபாணன் மெல்லத் தனது கையொன்றைத் தூக்கி எட்ட இருந்த ஒரு பெரிய பெட்டியைக் காட்டினான். அதைத் திறந்து பார்த்த கௌதமிபுத்ரன் அதில் புத்தம் புது உடைகள் பல இருந்ததைப் பார்த்து நாகபாணன் கருத்தை அறிந்து தனது ஈரச் சராயை அவிழ்த்து அதிலிருந்த புது உடைகளிலொன்றை அணிந்து கொண்டான். நாகபாணன் மறுபடியும் வேறு ஓர் இடத்திலிருந்த தலைப்பாகையைக் காட்டினான். அதையும் அணிந்து கொண்ட கௌதமிபுத்ரன் அறைக் கோடியிலிருந்த நிலைக் கண்ணாடியில் தனது உருவத்தைப் பார்த்தான். உடை அவனது தோற்றத்தை அறவே மாற்றியிருந்தது. தலைப்பாகை பாதி முகத்தை மறைத்துவிட்டதால் பழையகால மருத்துவன்போல் காட்சியளித்தான் கௌதமிபுத்ரன்.

நாகபாணனின் கருத்து நன்றாகப் புரிந்து விட்டது கௌதமிபுத்ரனுக்கு. ஆயினும் நாகபாணனை அணுகி, "இது எதற்கு?" என்றான்.

"நீ இங்கிருந்து தப்பித்துச் செல்ல" என்ற நாகபாணனின் குரல் தழுதழுத்துக் கிடந்தது.

அவன் உணர்ச்சிகளின் எழுச்சியைக் கவனித்த சாதவாகனன் எந்த மனிதனிடமும் நல்ல குணங்கள் இருக்கத்தான் செய்கின்றன என்று உள்ளூர சொல்லிக் கொண்டான். அடுத்து நாகபாணன் சாதவாகனனை அழைத்து, "இன்று பகல் இங்கேயே இருந்துவிடு, இரவில் போகலாம்" என்றான்.

கௌதமிபுத்ரன் புன்முறுவல் செய்து, "முடியாது நாகபாணரே! நான் பகலுக்குள் திரும்பாவிடில் விபரீதம் விளையும்" என்று கூறிவிட்டு, "என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். என்னுடன் வந்த வீரர் தலைவனை அழைத்துப் போகிறேன்" என்றான்.

சிறிதுநேரத்திற்கெல்லாம் முழு மருத்துவ வேடத்துடன் வீரர்கள் தலைவனுடன் புறப்பட்டான், சாதவாகனன். நாகபாணன் முன்னதாக இட்ட கடுமையான உத்தரவால் அவனையாரும்தடை செய்யவில்லை. அவனைத் தன்னைப் போல பாவித்து நடக்க வேண்டுமென்று நாகபாணன் திட்டம் செய்திருந்ததால் கௌதமிபுத்ர மருத்துவன் அனைவ

அடைய விரும்பி ஸாதனை செய்கிற ஸாதகன். பகவான்தான் ஞான விதை போட வேண்டு மாதலால், ஞானாம்பாள்தான் ஞானப் பால் கொடுப்பாளாதலால், இவன் பகவானை வழிபடுகிறான். ஆர்த்தன் மாதிரி இவன் 'ஞானம் தா,' 'ஞானம் தா' என்று வேண்டி ப்ரார்த்தனை பண்ணினாலும் பண்ணுவான். அல்லது இப்படிக் கேட்காமல், பகவானின் திவ்ய ரூபத்தையும், கல்யாண குணத்தையும் வெறுமனே த்யானம் பண்ணிக் கொண்டே யிருப்பான். அதுவே ஆனந்தமாக இருப்ப தோடு இவனுடைய சித்தம் சிதறிப் போகாமல் இழுத்துக் கட்டி ஒருமுகப்படுத்தும். ஆசார்யாளும் இந்த சித்த ஏகாக்ரியத்துக் காகத்தான் உபாஸனையைச் சொன்னார். இவன் 'ஞானம் தா' என்று கேட்கவே வேண்டாம். பகவானை த்யானம் பண்ணிக்கொண்டு ஸந்தோஷமாக இருந்தாலே போதும். இவனு டைய சித்தம் ஒருமுகப்பட்டு, தானே அந்த பகவானின் நிர்குணமான, அரூபமான ஸத்ய நிலையில் இவனை இரண்டறக் கரைத்துவிடும். அப்படி, ஜீவாத்மா என்று கொஞ்சம்கூடத் தனியாகப் பிரிந்திருக்காமல் ஸத்ய வஸ்து வோடு ஐக்யமாய் இருப்பதுதான் ஞானம். அந்த நிலையிலே பூஜையும் இல்லை; த்யான மும் இல்லை. அந்த ஸ்டேஜுக்குப் போவதற் காகவே முதலில் இந்த ஜிக்ஞாஸு பகவானை பஜிக்கிறான்.

மூன்றாவது அர்த்தார்த்தி பற்றி அடுத்த இதழில் பார்ப்போம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்க ராச்சாரிய ஸ்வாமிகள்.**

ராலும் வணங்கப்பட்டான். நாகபாணன் அறையிலிருந்து புறப்படு முன்பாக, "நாக பாணரே! நாம் எப்பொழுது சந்திக்கலாம்?" என்று கேட்டான்.

"பௌர்ணமி தினத்தில்," என்றான் நாக பாணன்.

"நல்லது," என்றான் கௌதமிபுத்ரன்.

"அன்றும் சித்தரஞ்சனி பாடட்டும்" என்றான் நாகபாணன்.

"ஏன்?"

"பௌர்ணமி அன்றுதான் பாடத் துவங் கினாள். அந்தப் பாட்டிலேயே இந்தக் கதைக்கு முடிவு கட்டுவோம்."

புரிந்ததற்கு அறிகுறியாகத் தலையசைத் தான் கௌதமிபுத்ரன்.

அவன் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் உள்ளே நுழைந்த க்ஷத்ரபன், மகாக்ஷத்ரபர் சாளரத்தருகே நின்றிருப்பதையும் அவர் தூரத்தே எதையோ பார்ப்பதையும் கவனித்து உள்ளே நுழைந்து, "மகாக்ஷத்ரபர் எதையோ பார்க்கிறார்" என்று சொல்லிக் கொண்டே நாகபாணனை அணுகி வெளியே தனது கண்களை ஓட்டினான்.

தூரத்தே ஆற்றங்கரையை நோக்கி மருத் துவர் ஒருவர் நடந்து கொண்டிருப்பதைப் பார்த்து, "இந்த மருத்துவர் உங்களுக்கு முன் னமே பழக்கமா?" என்று கேட்டார் க்ஷத்ரபர்.

"நம் எல்லோருக்குமே பழக்கம்" என்றான் நாகபாணன்.

"அவன் நடையைப் பார்த்தால் போர் வீரன் நடை போலிருக்கிறது."

"ஆம். வீரர்களான மருத்துவர்கள் இல் லையா?"

"இருப்பார்கள். ஆனால் இந்த மருத்து வரை நான் எங்கோ பார்த்திருக்கிறேன்."

இதைக் கேட்ட மகாக்ஷத்ரபன் நகைத் தான். "க்ஷத்ரபா! உன் மூளையும் வேலை செய்யத் துவங்கிவிட்டது!" என்றும் கூறி னான் நகைப்பின் ஊடே.

அடுத்து ஏதோ புரிந்ததற்கு அறிகுறி யாகத் துடித்து வெளியே செல்ல முயன்ற க்ஷத்ரபனைத் தடை செய்த நாகபாணன், "அவனை யாரும் தடை செய்ய வேண்டாம்" என்றான் கடுமையாக.

"அவன்..."

"மகாவீரன்."

"ஆனால் எதிரி."

"என் உயிரைக் காப்பாற்றியவன்."

"அவனா?"

"ஆம். பகைவனிடமும் கருணை காட்டு பவன். லட்சத்தில் ஒருவன்."

"நமது வீரம்...?" என்று எதையோ சொல்ல முற்பட்ட க்ஷத்ரபனைத் திரும்பிப் பார்த்த நாகபாணன், "பௌர்ணமியன்று தீர்மானிக்கப்படும்" என்றும் சொன்னான்.

"பௌர்ணமி அன்றா?" என்று வினவி னான் க்ஷத்ரபன் ஆவலுடன்.

"ஆம். அன்று சங்கீதத்துடன் சமர் துவங் கும். சங்கீதம் உன் மகளுடையது. சமர் உன் சமர்த்தைப்பொறுத்தது" என்றநாகபாணன் இகழ்ச்சிநகை கொண்டு க்ஷத்ரபனை நோக் கினான்.

(தொடரும்)

அமைச்சர்: "வட்டிக் கடைகளை எல்லாம் அர கடைமை ஆக்குவது என்று மன்னர் இவர் முடிவு செய்திருக்கிறார்."

மற்றவர்: "ஏன்?"

அமைச்சர்: "ராணியின் நகைகளில் முக்கால் வாசி அங்கேதானே இருக்கு!"

— இளை. அ. கதிர்வேல்.





# அப்பாவுக்கு என் மேல் அன்பில்லை

ரம்யா தன் சந்தோஷம் முழுவதையும் இழந்துவிட்டதை உணர்ந்தாள். அதைச் சாதித்துவிட்ட திருப்தியோடு ஜானகிப் பாட்டி தன் வீட்டுக்குப் போய்விட்டாள். அவளுக்கு இதேதான் வேலை — அடுத்தவர் சந்தோஷத்தைக் கெடுப்பது. இது ரம்யாவுக்கும் தெரிந்ததுதான். இருந்தாலும் அவளால் அதை ஒரு பொருட்டில்லை என்று தள்ளிவிட முடியவில்லை.

முதல் நாள் இதே நேரத்தில் அவள் எவ்வளவு களிப்புடன் இருந்தாள்? அந்தச் சந்தோஷம் இப்போது எங்கே போயிற்று? முதல் நாள் நிகழ்ச்சியை அசைபோட்டுத் தன் எண்ணங்களைத் திசை திருப்ப முயன்றாள்.

கல்யாணப் புடவைகளை வாங்குவதற்காகத் தன் பெற்றோரோடு, திருமணத்திற்காக வந்திருந்த மூன்று சகோதரிகளுடன் அன்று புறப்பட்டிருந்தாள். புடவைகளை ஒவ்வொன்றாக ஆர்வத்துடன் பொறுக்கிக் கொண்டிருந்தபோது தன் பெற்றோரிடமும் சகோதரிகளிடமும் ஒரு பரபரப்புத் தொற்றிக் கொள்வதை ரம்யா உணர்ந்தாள். அவர்கள் பார்வை சென்ற பக்கம் திரும்பிப் பார்த்தாள். மறுகணம் நாணமும், மகிழ்ச்சியும் கலந்து குளிப்பாட்ட தந்தைக்குப் பின் பதுங்கிக் கொண்டாள்.

அவளுக்கு மாலை சூட்டப் போகிற ராமகிருஷ்ணன் தனக்குத் துணிமணி வாங்க, தன் நண்பர் குழாத்துடன் அதே கடைக்குத் தற்செயலாக வந்திருந்தவன் இவர்களைப் பார்த்துவிட்டு இவர்களோடு சேர்ந்து கொண்டு அவளுக்குப் புடவைகளைத் தேர்ந்தெடுத்ததும், அத்தனை பேருக்கு முன்னிலையில் 'உனக்கு இது ரொம்பவும் அழகாக இருக்கும்' என்று ஒரு கோபால்ட் ப்ளூ கலர் பட்டுப் புடவையைக் காட்டிப் பேசியதும் அவளை எங்கோ கனவுலகுக்குக் கொண்டு போயின.

அதன்பின் திரும்பும் வழியிலும், வீடு வந்து சேர்ந்தபின்னும் அவள் அதே எண்ணங்களில் ஆழ்ந்திருந்து, தன் சகோதரிகள் ஏதோ கேட்டபோதும் கவனிக்காமல் அவர்கள் அதற்காக அவளை 'அவரோ'டு இணைத்துக் கேலி செய்ய, மேலும் பூரிப்பில் ஆழ்ந்து — ஓ, அவையெல்லாம் எவ்வளவு இனிமையான கணங்கள்!

மறுநாள் காலை நகைக் கடைக்குப் போனபோதும் அவள் பார்வை சபலத்துடன் திருட்டுத்தனமாக சுற்றுமுற்றும் பார்த்ததை முதல் சகோதரி நளினி கவனித்துவிட்டு, "அம்மா, முதலிலேயே மாப்பிள்ளைக்கு ஃபோன் பண்ணிச் சொல்லியிருக்கக் கூடாதா? அவரும் ஒரு மோதிரமோ, சங்கிலியோ வாங்கலாமென்ற சாக்கில் இதே கடைக்கு வந்திருப்பாரே! இப்போது பார் ரம்யா எப்படித் தவிக்கிறாள்" என்று குட்டை உடைக்க, அவள் முகம் குங்குமமாகச் சிவந்தது.

நளினிக்கு அடுத்தவளான சுமதி தொடர்ந்து ரம்யாவை சீண்டிக் கொண்டே இருந்தாள். கடைக்காரரிடம் ஏழு கல் தோடுக்கு அப்பா ஆர்டர் கொடுத்தபோது ரம்யா குறுக்கிட்டாள். "ஏழு கல் தோடு ரொம்பவும் சின்னதாக இருக்குமே அப்பா— நளினி, சுமதி, குமாரிக்குப் பண்ணின மாதிரி எனக்கும் பெரிதாக வேண்டும்."

"அவர்களைவிட உனக்கு சின்ன முகம்மா. பெரிய தோடு எடுப்பாக இருக்காது. இதுவே இருக்கட்டும்" என்று அவர் சமாதானம் சொல்லிவிட்டார்.

அவளுக்கு அப்போது எதுவும் விகல்பமாகத் தெரியவில்லை.

இப்போது தெரிந்தது — ஜானகிப் பாட்டி வந்து பேசிவிட்டுப் போனபிறகு. ஜானகிப் பாட்டியின் குணம் ஊர் அறிந்ததுதான் என்றாலும் அவள் சொல்வதில் நியாயம்




இருக்கும்போது, அதை எப்படிப் பொருட்படுத்தாமல் இருப்பது?

அவள் ஒவ்வொன்றாக யோசித்துப் பார்த்தாள்—வாங்கிய புடவைகளின் எண்ணிக்கையிலிருந்து, ஜரிகையின் அகலத்திலிருந்து, வைரத் தோட்டின் மதிப்பிலிருந்து, எல்லாவற்றையும்.

நளினிக்குச் செய்ததைவிட, சுமதிக்கு அப்பா செய்தது குறைவுதான். குமாரிக்கு இன்னும் குறைவு. தனக்கோ கேட்கவே வேண்டாம். ஜானகிப் பாட்டி சொன்னது உண்மைதானே? அப்பாவுக்கு மற்ற பெண்களைவிடத் தன்னிடம் ஒட்டுதல் குறைவுதானே?

அவளுடைய உற்சாகம் முழுதும் வடிந்துவிட்டது. எல்லோருடனும் கலகலப்பாகப் பேசும் சுபாவத்தினள் இப்போது தன்னுள் ஒடுங்கிக் கொண்டாள். அவளுக்கு என்றுமே அம்மாவைவிட அப்பாவிடம் பாசம் அதிகம். அப்பாவும் தன்னிடம் அப்படித்தான் அதிக ஆசையாக இருப்பதாய் அவள் இத்தனை நாள் நினைத்திருந்தாள். அது உண்மையில்லை என்ற உணர்வை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

நாட்கள் விரைவாக ஓடின. ரம்யா, எல்லோரிடமும் மேலுக்குப் பேசிக் கொண்டு உள்ளுக்குள் ஒட்டாது ஒடுங்கிக் கொள்வது பிறர் கவனத்திலிருந்து தப்பினாலும், அம்மா கவனித்துவிட்டாள்.

முதலில் சொல்ல மறுத்தாலும், அம்மா தூண்டித் தூண்டிக் கேட்டபோது ரம்யாவால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அணை கடந்த வெள்ளமாய், உள்ளே உறைந்திருந்த உணர்ச்சிகள் குமுறிக் கொண்டு வெளியே வந்தன.

"சரியான பைத்தியம்டி ரம்யா நீ. உன்

அப்பாவுக்கு உங்க நாலு பேரில் உன்னிடம் தானே உயிர்? அவராவது, உன்னிடம் பிடிப்பில்லாமல் இருப்பதாவது? இந்த எண்ணம் உனக்கு எப்படி ஏற்பட்டது?" என்று அம்மா ஆதுரத்துடன் கேட்டபோது அவள் தன் நினைவில் தேக்கி வைத்திருந்ததை வரிசையாக ஒப்பித்தாள்.

"அட அசடே, கொஞ்சமாகச் செலவழித்தால், அன்பும் கொஞ்சம்தான் என்று அர்த்தமா? உன் அப்பாவுக்கு அன்று இருந்த அளவு சொத்து இன்று இருக்கிறதா? மூன்று பெண்களுக்குத் திருமணம் நடத்தியவர் அவர். இப்போது காசு கொஞ்சமாக இருப்பதால் கொஞ்சமாகச் செய்கிறார், அவ்வளவுதான். அதுகூட, நீ இந்த மாதிரி எடுத்துக் கொள்வாய் என்று தெரிந்திருந்தால் யாரிடமாவது கடன் வாங்கியாவது இன்னும் நிறையச் செலவழித்திருப்பார். இப்போதும் ஒன்றும் கெட்டுவிடவில்லை. நான் அவரிடம் சொல்கிறேன்."

"பணம் செலவழித்தால்தான் அன்பு என்று நான் சொல்லவில்லேம்மா. ஆனால் ஜாஸ்தி அன்பிருந்தால்தானே ஜாஸ்தி செய்யத் தோன்றும்? அப்பா எனக்கு நல்ல இடமாகத்தான் பார்த்திருக்கிறார். அப்பா கொடுத்துத்தான் நான் அங்கே சிரமப்படாமல் இருக்க முடியும் என்றில்லை. ஆனால் இவ்வளவு வெளிப்படையாக ஒருவருக்கு இருப்பதையெல்லாம் எடுத்துக் கொடுத்துவிட்டு, இன்னொருவருக்கு சும்மா பேருக்குச் செய்தால் அதை நான் வேறு எந்த அர்த்தத்தில் எடுத்துக் கொள்வது? என் மேலும் அப்பாவுக்குப் பிரியம் இருந்திருந்தால் அவர் முதலிலேயே திட்டமிட்டு எனக்கென்று பணம் தனியாக எடுத்து வைத்திருந்திருப்பார்... நீ அவரிடம் இனிமேல் சொல்லவும் வேண்டாம்; அவர் யாரிடமும் கடன் வாங்கவும் வேண்டாம். எனக்கு நிறையக் கிடைக்கவில்லையே என்ற குறையில் நான் பேசவில்லை; அப்பாவின் அன்பு இல்லையே என்ற வருத்தம்தான்."

அம்மாவுக்கு என்ன. சொல்வது என்று புரியவில்லை. யாரோ வந்து அழைக்க, அவள் அமைதி இல்லாத மனத்துடன் அங்கிருந்து நகர்ந்தாள்.

**தி**ருமணத்திற்கு இன்னும் இரு நாட்களே இருந்தன. பம்பாய், டில்லி, நாக்பூர், திருவனந்தபுரம் என்று மூலைக்கொருவராய் சிதறிக் கிடந்த உறவினர்கள் நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒன்றாகக் குழுமிய உற்சாகத்தில் ஊர்ப் பேச்செல்லாம் பேசித் தீர்த்துக் கொண்டிருந்தார்கள். வாசலை அடைத்து எழும்பி ருந்த பந்தலின் கீழ் மெல்ல வீசிய குளிர்ந்த காற்றின் சுகத்தை அனுபவித்தவர்களாய், சம்பிரமாக சாப்பிட்ட களைப்பில் சிலர் கண்ணயர்ந்திருந்தார்கள். ஒரு மூலையில் சீட்டாட்டக் கச்சேரியும் அரங்கேறியிருந்தது. வருபவர்களை உபசரிப்பதற்கும், அவர்களுக்கெல்லாம் புடவை—பாத்திரங்களை எடுத்துக் காட்டுவதற்குமே அப்பாவுக்கும் பெரிய அத்திம்பேருக்கும் நேரம் சரியாக இருந்தது. இன்னும் வாங்க வேண்டிய கறிகாய், வெற்றிலை, பூ இதர வகையறாக்களுக்குக் கேட்டுக் கேட்டு அவள் தம்பி லிஸ்ட் போட்டுக் கொண்டிருந்தான்.

இவையெல்லாம் தன் மூத்த சகோதரிகளின் திருமணங்களின்போது ரம்யா மிகவும் அனுபவித்து ரசித்த அம்சங்கள். ஆனால் இப்போது இவை எதிலுமே அவள் மனம் லயிக்கவில்லை. அன்று காலைதான் ஜோத்பூரிலிருந்து வந்திருந்த மாமா கூப்பிட்டதால் அவரோடு பந்தலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள். எழுந்து உள்ளே செல்ல நினைத்தவள் யாரோ சைக்கிளில் வருவதைப் பார்த்ததும் கொஞ்சம் நிதானித்தாள். வருவது 'அவருடைய' கடைசித் தம்பி என்று புரிந்ததும் மனம் மலர்ந்தது. இன்னும் கல்யாணமே ஆகவில்லை, அதற்குள் 'அவருடைய' உறவினர்களைப் பார்ப்பதே மனத்துக்கு எவ்வளவு இதமாக இருக்கிறது என்று தன்னுள் வியந்து கொண்டாள்.

அவள் மாமாவின் காதில் கிசுகிசுக்க, அவர் அவனைக் கூப்பிட்டுத் தன் அருகில் உட்கார்த்திக் கொண்டார். "கோவிலில் அபிஷேகம் செய்தோம். இந்தப் பிரசாதத்தை இங்கே கொடுத்து வரச் சொல்லி அப்பா அனுப்பினார்" என்று அவன் நீட்டிய பாத்திரத்தை வாங்கி அவளிடம் கொடுத்துவிட்டு அவர் அவனிடம் பேச ஆரம்பித்துவிட்டார். பேச யாராவது இருந்தால் அவருக்குச் சோறு தண்ணீர்கூட வேண்டியதில்லை என்று அம்மா சொல்வாள்.

ரம்யா படபடப்போடு உள்ளே போய் அம்மாவிடம் விவரத்தைச் சொன்னாள். சமையலுக்கு வந்திருந்த மாமியிடம் ஏதோ எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்த அம்மா, "கைக்காரியமாக இருக்கிறேனே, நீயே எல்லோருக்கும் எடுத்துக் கொடேன்" என்றவள் இவள் திரும்பியதும் சொன்னாள். "முதலில் அந்தப் பையனை உள்ளே கூப்பிட்டுக் காப்பி டிபன் கொடு. பிறகு விநியோகம் பண்ண

**தானும் கெட்டு... பிறரையும் கெடுத்து...**

சிகரெட் பிடிப்பவர்கள் தங்களைக் கெடுத்துக் கொள்வதோடு மட்டுமல்லாமல் அவர்கள் வெளிவிடும் புகையால் மற்றவர்களுக்கும் கெடுதல் செய்தவர்களாகிறார்கள். சிகரெட் பிடிப்பவர்கள் வெளிவிடும் புகை காரணமாக அமெரிக்காவில் சுமார் 500 முதல் 5000 பேர்வரை புகை பிடிக்காத அப்பாவிகள் பாதிக்கப்படுகிறார்கள். சிகரெட்டில் உள்ள நச்சுப் பொருள் புகை ரூபமாக காற்றில் கலந்து மற்றவர்களின் ஆயுட் காலத்தையும் குறைப்பதற்கு ஏதுவாகின்றது. நம் நாட்டில் இப்படி எத்தனை பேர் பாதிக்கப்படுகிறார்களோ, தெரியவில்லை.

தகவல்: டி.வி. கிருஷ்ணசாமி.

லாம்.''

அதற்குள் மாமாவே அவனை டிபனுக்காக உள்ளே கூட்டிச் சென்றுவிட்டதைப் பார்த்து விட்டு, 'அவர்' வீட்டிலிருந்து கொடுத்தனுப்பிய பிரசாதம் என்ற நினைப்பில் மனம் குதூகலிக்க, உற்சாகத்துடன் அம்மாவின் கையை வலுக்கட்டாயமாகப் பிடித்துக் குழிக்கச் செய்து ஒரு கரண்டி நிறைய பஞ்சாமிர்தத்தை எடுத்து ஊற்றினாள். பின் கண்ணில் பட்டவர்களுக்கெல்லாம், ''கோவில்பிரசாதம். 'அவர்' வீட்டிலிருந்து அனுப்பியிருக்கிறார்கள்' என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டு கரண்டி கரண்டியாக எடுத்துச் சிறுசிறு இலைகளில் வைத்துக் கொடுத்தவள் பாத்திரத்தில் அளவு குறையக் குறைய, எல்லோருக்கும் கொடுக்க வேண்டுமே என்ற எண்ணத்தில் கரண்டிக்குப் பதில் ஸ்பூனை எடுத்துக் கொண்டாள்.

எல்லோருக்கும் கொடுத்து முடித்துவிட்டு வெறும் பாத்திரத்துடன் அம்மாவிடம் திரும்பவும், பக்கத்து வீட்டுக்கு விளையாடப் போயிருந்த நளினியின் ஆறு வயது மகன் செல்வா ஓடி வந்து, 'சித்தி!' என்று அவளைக் கட்டிக் கொள்ளவும் சரியாக இருந்தது.

''அடடே, ஏண்டா கண்ணு, இவ்வளவு நேரம் வரவில்லே? இந்தா கோவில் பிரசாதம், பஞ்சாமிர்தம்'' என்றவாறு பாத்திரத்தில் ஒட்டிக் கொண்டிருந்ததை ஸ்பூனால் திரட்டி எடுத்துக் கொடுத்தாள்.

இதைப் பார்த்த அம்மாவுக்கு மூளையில் பொறி தட்டியது. ''ஏண்டி, குழந்தைக்கு இவ்வளவு கொஞ்சமாகக் கொடுக்கிறாயே, போதுமா?'' என்று நிதானமாகக் கேட்டாள்.

ரம்யா ஒன்றும் புரியாமல் நிமிர்ந்து பார்த்தாள். ''அவ்வளவுதானேம்மா பாக்கி இருந்தது? நிறைய இருந்திருந்தால் அவனுக்கு நிறையக் கொடுத்திருக்கமாட்டேனா?''

''எனக்கு மட்டும் ஒரு பெரிய கரண்டி நிறையக் கொடுத்தாயே, அதனால் கேட்டேன்.''

ரம்யாவுக்குக் குழப்பமாக இருந்தது. ''என்னம்மா இது? அப்போது பாத்திரம் நிறைய இருந்தது. உனக்கு நிறையக் கொடுத்தேன். பாத்திரம் நிறையப் பிரசாதம் இருக்கும்போது, ஒரே ஒரு துளி எடுத்துக் கொடுத்தால் நன்றாக இருக்குமா? குழந்தை வந்த போது கொஞ்சம்தான் மீதி இருந்தது. இருந்ததை அவனுக்குக் கொடுத்தேன். எனக்குக் கூட எடுத்துக் கொள்ளவில்லை. இதில் கொஞ்சம், நிறைய என்றெல்லாம் கணக்கு உண்டா என்ன? கூடவோ, குறையவோ, கோவில் பிரசாதம் எல்லோருக்கும் கிடைக்க வேண்டும். அவ்வளவுதானே? நிறையச் சாப்பிட்டால்தான் நிறையப் புண்ணியம், கொஞ்சம் சாப்பிட்டால் புண்ணியமும் கொஞ்சம் தானா?''

''அப்படித்தானேடி உன் அப்பாவும் நினைக்கிறார்?'' என்றாள் அம்மா, இன்னும் நிதானமாக.

ரம்யாவுக்கு அது சுரீரென்று மனத்தில் உறைத்தது. சரிதானே! நிறைய இருந்தபோது எல்லோருக்கும் நிறையக் கொடுத்துவிட்டு எஞ்சியிருந்ததை அந்தக் குழந்தைக்குக் கொடுத்ததாலேயே எப்படி அந்தக் குழந்தை மீது தான் வைத்திருக்கும் அன்பு குறைச்சல் என்று காட்டவில்லையோ, அதே மாதிரி, அப்பா நிறையச் சொத்து இருந்தபோது நடத்திய திருமணங்களில் நிறையச் செலவழித்ததும், சொத்துக் குறைந்த பிறகு நடத்தும் திருமணத்தில் கொஞ்சமாகச் செலவு செய்வதும் தவறில்லைதானே! அவருடைய அன்பும் கோவில் பிரசாதம் மாதிரிதானே? அதற்கு ஏது அளவுகோல்?

தெளிவடைந்த மனத்துடன், ''ஆமாம்மா, நீ சொல்வது சரிதான்'' என்று தழுதழுத்த குரலில் சொன்ன ரம்யா, குழந்தை செல்வாவை வாரியணைத்துக் கட்டிக் கொண்டாள்.

# ஆராதனை

* ரா.... ரா.... ராஜீவ்! பிரதமர் ராஜீவ் வருகையால் தஞ்சாவூர் — திருவையாறு அமர்க்களப்பட்டது! குடமுருட்டி பாலம் வெடிகுண்டுக்கு இலக்காகி அமர்க்களம் — அல்லோலகல்லோலமாகியது! ஜனவரி 29 அன்று திருவையாறு செல்லும் பஸ்கள் பயணிகள் பிதுங்க எங்கெங்கோ பவனி வந்தது. தெருக்களெல்லாம் செப்பனிடப்பட்டு மின் அலங் காரத்துடன் ஜொலித்தன. பிரதமரின் நண்பர், செய லாளர், மணி சங்கர் ஐயரின் வீடு ஏர்கண்டிஷன் செய்யப்பட்டது. அந்தத் தெருவிலுள்ள அத்தனை குடிசை வீடுகளும் ஓட்டு வீடுகளாக அவதாரமெடுத் தனவாம்!

* எம்.பி., எம்.எல்.ஏ.க்களுக்கு 95 சதவிகிதம் பாஸ். போக மீதி 5 சதவிகிதம் பாஸ்தான் ஆராதனை விழா நிர்வாகிகளுக்குத் தரப்பட்டதாம். சமாதியில் ராஜீவ் வருகையை 'முன்னிட்டு இந்த ஏற்பாடு. பிரதமர் வருகையால் ஆராதனை விழா கமிட்டிக்குச் சுமார் ரூ 12000 செலவு என்று முணுமுணுத்தார் ஒரு நிர்வாகி.

* சுமார் 16,000 ஜனத்தொகையுள்ள திருவையாற்றில் 29,000 போலீசார் முகாமிட்டதால் விழி பிதுங் கிற்று.

* இவ்வளவுக்கும் பிறகு பிரதமர் ஆராதனை நடக்கும் இடத்துக்கு, வராமலே திரும்பிவிட்டது பெரிய ஏமாற்றம். ''நுழைவாயில் ரொம்பக் குறுகலானது: பிரதமரைச் சரியாகப் பாதுகாக்க முடியாது: சொல்லிட்டேன்: அப்புறம் என் மேல் பழி சுமத் தாதீர்கள்!'' என்று கம்ப்யூட்டர் கூறிவிட்டதாம்!

* புது நிர்வாகிகளைத் தேர்ந்தெடுப்பதில் ரொம்பக் கெடுபிடி! மூப்பனார் எப்போதும் போல் தலைவர். செயலாளர் பதவிக்குத்தவிலுக்குஏகப்பட்ட ஆதரவு! ஆனால் மற்றொரு செயலாளர் பதவிக்குப் பிடிலைவிட புல்லாங்குழல் வரப் பகீரதப் பிரயத்தனம்! ஆனால் தேர்தல்நேரத்தில்புல்லாங்குழல்வரவில்லை! ஆகவே மீண்டும் பிடிலே ஆக்கிரமித்துக் கொண்டது!

* மத்தியான நேர நிகழ்ச்சிகளில் பாடியவர்கள் (கதறிய வர்கள்) எல்லாருமே 'கற்றுக் குட்டிகள்! ஆராதனை விழாவில் ஆ.... ரோதனை! தியாகப் பிரும்மம் மன்னிக்க மாட்டார்! 'இவர்கள் எவ்வாறு இடம் பெறுகிறார்கள்?' என்று நிர்வாகி ஒருவரைக் கேட் டேன். 'விழா நிர்வாகிகளே, மல்லுக்கு நின்று சிபாரிசு செய்கிறார்கள்' என்றார் பெயர் சொல்ல விரும்பாத அந்த நிர்வாகி!

* ரசிகர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்ட கணேஷ், குமரேஷ் என்ற இளம் பிடில் வித்வான் களின் நிகழ்ச்சி இடம் பெறப் பலர் மல்லுக்கு நிற்க வேண்டியதாயிற்று. நிகழ்ச்சி நிரலைத் தயாரிக்க விழாக் குழுவினர் இன்னும் சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

* சாப்பாட்டிற்குக் கும்பலோடு கும்பலாக வித்வான் களும் இடிபட்டு மிதிபட வேண்டுமா?



குன்னக்குடி வைத்தியநாதன்

செயலாளர்கள்

ஹரித்துவாரமங்கலம் பழனிவேல்



பொங்ஸனா. கோபாலன்



# கொஞ்சம் அலசல்!

…விர்த்தியின்போது பிரபல வித்வான்கள்
… கலந்து கொள்வதில்லை! அகௌரவமாக
…க்கிறார்கள்! அந்தக் காலத்தில் அரியக்குடி,
…, செம்மை, மகாராஜபுரம் பெருமையுடன்
…து கொண்டதை நினைவூட்டிப் பேசினார்
…யவர் செம்மங்குடி! பாட்டுக் கச்சேரிக்கு ஒன்றும்
…த்ததல்ல இவரது பேச்சுக் கச்சேரி!

…ராட்டிலிருந்து ஒரு பெரிய தொகை கொடுத்து
…ண்டலின் ஸ்ரீனிவாஸிடம் கச்சேரி 'புக்' செய்ய
…தவர் தேதி இல்லை என்ற பதில் கேட்டு ஏமாற்ற
…டந்தார்! 'சிந்து பைரவி' க்குப் பிறகு மாண்டலின்
…ரீனிவாஸைவிட ஜேசுதாசுக்கு ரசிகர்கள் கூட்டம்
…பெருகி இருக்கிறது. அன்று அவர் பாடியது தியாக
…ராஜர் சன்னிதியில் எப்படிப் பாட வேண்டும் என்
…தற்கு நல்ல உதாரணம்! ரசிகர்கள் மனத்தில்
…என்றும் நிலைத்திருக்கும்!

…தியாகராஜ சுவாமிகளின் சமாதிக்கு அருகிலேயே
…இடம் பிடித்து நிலம் வாங்கி அவருடைய பிரதம
…டரான ஸ்ரீமத் வேங்கடரமண பாகவதருக்கு நினை
…வாலயம் எழுப்ப இருக்கிறார்கள், தஞ்சை ஸ்ரீமத்
…வேங்கடரமண பாகவத சுவாமிகள் சபாவினர்.

இலங்கை அரசின் கொடுமை. யாழ்ப்பாணத்தில் இதுவரை வசித்து வந்துள்ள தவில் வித்வான்கள் கணேசம் பிள்ளை, சின்ன ராஜா இவர்களைத் தமிழ் நாட்டுக்கு இடம் பெயர வைத்துள்ளது. இருவரும் சொன்ன துயரக் கதைகள் ஏட்டிலடங்கா!

* தென்னாப்பிரிக்கா நேடாலிலிருந்து வந்திருந்தார் ஜி.என். முதலியார் தம்பதி சமேதராக. தியாகராஜர் சன்னிதியில் வீணை வாசிக்க ஒரு தவமே செய்திருக்கிறார்!

* பொருளாளர் கோபாலன் சொன்ன தகவல்:— 15 அல்லது 16 லட்ச ரூபாய் செலவில் ஒரு மணி மண்டபம் கட்டி அதில் விழாவை நடத்தி மற்ற நாட்களில் அதைக் கல்யாண மண்டபமாக வாடகைக்கு விடத் திட்டமாம்!

* பஞ்ச நதி தீரத்தில் நாதோபாசகராக விளங்கும் தியாகப்ரம்மம் கோயில் கொண்டுள்ள திருவையாற்றில் இந்தியாவின் ஏழு கலாசேந்திரங்களில் ஒன்று நிறுவப்பட, இருபத்து நான்கு ஏக்கர் நிலம் ஒதுக்கப்பட்டுள்ளது!

* நிர்வாகிகளின் தேர்தலில் ஏற்பட்ட சூட்டைத் தணிக்க ஒரு விநோதமான நிகழ்ச்சி — இரவு 11 மணிக்கு: மதுரை சோமு பாட்டு — குன்னக்குடி வயலின், ஹரித்வாரமங்கலம் பழனிவேல் — தவில்.

— உமாபதி



துவக்க விழாவில் சங்கீதம் பற்றி நிறையப் பேசிய தஞ்சை போலீஸ் அதிகாரி



காக்கி உடையில் அங்க வஸ்திரம், பஞ்ச கச்சம் அணிந்து பஞ்ச ரத்னம் பாட விரும்பும் போலீஸ்!

## 6. கரும்புத் தோட்டத்தில் இந்தியர் அனுபவித்த கொடுமைகள்!

"நீங்கள் இந்தியாவிலிருந்து வருகிறீர்களா?" என் சீட்டின் இருபக்கத்திலும் கைகளை அழுத்திப்பிடித்தபடி ஏர்பாஸிஃபிக் விமானப் பணிப் பெண் என் முகத்துக்கு நேர் எதிரே குனிந்து நின்றாள். மாநிறம். மையிட்ட வட்டப் பெரிய கரிய விழிகள்.

"ஆமாம்."

"என் பெயர் அநீதா!" என்று அவள் முகம் மலர்ந்து கையை நீட்டிக் குலுக்கினாள்.

"நான் ஃபீஜி இந்தியன். எனக்கு இந்தியாவிலிருந்து வரும் அசல் இந்தியர்களைப் பார்த்தால் ரொம்பச் சந்தோஷம் ஏற்படுகிறது. ஏனென்றால் என் தாத்தா இந்தியாவிலிருந்து வந்தவர். அவர் பெங்காலி என்று நினைக்கிறேன்."

"நீங்கள் பெங்காலி பேசுவீர்களா?"

"ஊஹூம். நாங்கள் பேசுவதெல்லாம் ஹிந்தி. பெங்காலியெல்லாம், என் தாத்தாவோடு போயிற்று!"

ஒடிசலான உருவமாய், சூட்டிகையாய்க் குறுக்கும் நெடுக்குமாக ஃபீஜி தேசிய உடையில் அவள் நடக்கையில் என்னைப் பார்க்கும் போதெல்லாம் பளீரென்று புன்னகை புரிந்தாள். என் தேவைகளை விசேஷமாகக் கவனித்துக் கொண்டாள். சமயம் கிடைத்தபோதெல்லாம் என் ஸீட்டைப் பிடித்தபடி தரையில் உட்கார்ந்து என்னைப் பற்றி, என் பயணத்தைப் பற்றி இந்தியாவைப் பற்றிச் சின்னக் குழந்தையின் ஆர்வத்துடன் கேட்டாள்.

இடையில் திரு கிருஷ்ணமூர்த்தி என்னைப் பார்க்க வந்தபோது, "நீங்கள் உங்கள் அமைப்பைப் பற்றிச் சொல்ல வேண்டும்" என்றேன். "சங்கம் என்கிற அமைப்பு என்னைக் கவனித்துக்கொள்ளும் என்றுதான் எனக்குத் தெரியுமே தவிர வேறு எந்த விவரமும் எனக்குத் தெரியாது. என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிக்காவில் ஃபீஜியைப் பற்றிய விவரங்களில் 'சங்கம்' என்ற ஒரு தமிழ்ப் பத்திரிகை இங்கு வெளியிடப்படுவதாகப் படித்தேன்."

"ஓ. அந்தப் பத்திரிகை இப்பொழுது நின்று போய் வெகுகாலமாகிவிட்டது" என்றார் கிருஷ்ணமூர்த்தி. "தமிழ் பேசுபவர்களே அதிகமில்லாதபோது படிப்பவர்களை எங்கே தேடுவது?"

"சங்கம் என்னும் உங்கள் அமைப்புத் தமிழர்களின் அமைப்பில்லையா?"

"இல்லை. தென்னிந்தியர்களின் அமைப்பு. தென்னிந்திய ஐக்கிய சன்மார்க்க சங்கம் என்று பெயர். ஐம்பது வருஷங்களாக இயங்குகிறது. ஏற்றமும் தாழ்வும் அதன் வளர்ச்சியில் உண்டு. 'தென்னிந்திய கலாசாரம் வட இந்திய கலாசாரத்திலிருந்து மாறுபட்டது. அது காப்பாற்றப்பட வேண்டும்' என்று ஐம்பது வருஷங்களுக்கு முன் ஒரு தென்னிந்தியருக்கு ஏற்பட்ட உணர்வினால் இந்தச் சங்கம் உருவாயிற்று. இதில் தென்னிந்தியர்கள் மட்டும்தான் அங்கத்தினர்களாகச் சேரலாம். ஆனால் அதன் சலுகைகள் எல்லா இந்தியர்களுக்கும் உண்டு."

"நீங்கள் எல்லாரும் உங்கள் தாய் பாஷையைப் பேசுவதில்லையா?"

"தாய் பாஷை என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாமல் போய்விட்டது. தென்னிந்தியர் வட இந்தியர் எல்லாருக்கும் பொதுவாக ஒரே பாஷைதான். ஹிந்திதான் தற்சமயம் தாய் பாஷை. இதற்கான சரித்திரத்தை உங்களுக்கு நான் சொல்ல வேண்டும். இங்கே கரும்புத் தோட்டத்தில் வேலை செய்வதற்காக இந்தியாவின் பல பாகங்களிலிருந்து ஆண்களையும், பெண்களையும் இங்கே வரவழைத்தார்கள். அல்லது பிடித்துக் கொண்டு வந்தார்கள். எல்லாரும் சேர்ந்து வரிசை வரிசையான கூலிக்காரர் குடில்களில் வாழ்ந்தார்கள். நிர்ப்பந்தத்தினால் தங்களுக்குள்ளேயே கல்யாணம் செய்து கொண்டார்கள். ஒரு குடும்பத்தில் கணவன் தமிழன், மனைவி தெலுங்கு, மாப்பிள்ளை மலையாளி, மருமகள் பீஹாரி என்று இருக்கும்போது எந்த பாஷையைப் பேசுவது? ஹிந்தி பேசுபவர்கள் அதிகபட்சமாக இருந்ததால் ஹிந்தியே பேசும் மொழியாகப் போய்விட்டது."

"இந்தியாவில் நாங்கள் நடைமுறையில் கொண்டு வர முடியாத ஒரு தேசிய சங்கமத்தை நீங்கள் இங்கு சாதித்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்கள்!"

கிருஷ்ணமூர்த்தி பலவீனமாகச் சிரித்தார்.

"இங்கேயும் கருத்து வேற்றுமைகளும் வித்தியாசங்களும் இல்லாமல் இல்லை. நீங்களே தெரிந்து

வாஸந்தி

கொன்வீர்கள்!'' என்று கூறி விட்டுத் தொடர்ந்தார்:

''ஃபிஜியின் இன்றையவளர்ச் சியில் சங்கத்திற்கு முக்கிய பங்கு உண்டு. நான் இன்னும் கொஞ் சம் விளக்கமாக எங்கள் சரித் திரப் பின்னணியைச் சொன் னால்தான் உங்களுக்குச்சரியாகப் புரியும். இங்கு தோட்டத்தில் கூலி வேலை செய்ய வந்தவர்கள் இங்கிலீஷ் கம்பெனிக்காரர்களு டன் ஐந்து வருஷ ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு வந்தவர்கள். அதைக் கொச்சையாக 'கிர்மிட் காலம்' என்று சொல்ல ஆரம் பித்தார்கள். விருப்பமிருந்தவர் கள் இன்னும் ஐந்து வருஷத் துக்குத்தொடர்ந்துவேலைசெய்ய லாம் அல்லது இந்தியாவுக்குத் திரும்பலாம். ஒருவழி டிக்கெட் இடைக்கும் என்று ஒப் பந்தம். நிறைய பேர் வேலைப் பளுவும் கொடுமை யும் தாங்காமல் இறந்து போனார்கள். வெகு சிலர்தான் ஐந்து வருஷங்கள் கழிந்து திரும் பிப் போனார்கள். பாக்கிப்பேர் இங்கேயே இருந்துவிட்டார்கள். பத்து வருஷம் வேலை செய்து இங்கேயே தங்கியவர்களுக்கு இல வசமாகக் கம்பெனி நூறு ஏக்கரா நிலம் தந்தது. 'கிர்மிட் கால' கட்டத்தில் இந்தியர் கள் ரொம்பக் கஷ்டப்பட்டார்கள்.

''ஆமாம். பாரதிகூட அதைப் பற்றிப் பாடியிருக்கிறார்.''

''இங்கேயும் அந்தப் பாட்டு சிலருக்குத் தெரியும். அப்படி ரொம்பக் கஷ்டப்பட்ட காலத்தில் இந்தியர்களின் வாழ்க்கை நிலையும் நெறி நிலையும் ரொம்பவும் மோசமாக இருந்தது. அவர்களிடையே ஒரு மகானைப் போல குப்புஸ்வாமி என்று ஒரு தமிழர் இருந்தார். இவ்வள விற்கும் அவரும் ஒரு கூலி ஆள்தான். சாத் விக குணம் கொண்டவர். 'சாது குப்பு ஸ்வாமி' என்று அவரைச் சொல்வார்கள். தென்னிந்தியர்களின் நிலையைக் கண்டு மிகவும் கவலை கொண்டார். அவர்களுடைய சந்ததிகளின் எதிர்காலத்திற்குஏதாவும் வழி செய்யாவிட்டால் கலாசாரமும் அழிந்து எதிர்காலமும் சூன்யமாய்ப் போகும் என்று பயப்பட்டார். கல்வி ஒன்றுதான் வழி என்று முதன்முதலில் அவருக்குத்தான் தோன்றியது. அவருடைய முயற்சியால், சில தென்னிந்தி யர்கள் கூட்டுச் சேர்ந்து 'சங்கம்' ஜனித்தது. கூலிப் பட்டாளங்கள் வாழும் பகுதிகளில் சின்னச் சின்னதாகப் பல பள்ளிகள் துவங்

ஃபிஜியின் இயற்கை எழில்.



நாண்டியில் கடைத் தெரு

# முதுகுக்குக் கவசம் கட்டாத ரகசியம்...



புகழேந்தியை மட்டம் தட்டுவதற்கு எண்ணிய ஒட்டக்கூத்தர், ''எங்கள் சோழ அரசன் முதுகுக்குக் கவசம் கட்டுவது இல்லை. ஏன் தெரியுமா? பெரிய வீரன்!'' என்னும் அர்த்தம் தொனிக்கப் பேசினார்.

உடனே புகழேந்தி, ''உங்கள் சோழன் முதுகுக்குக் கவசம் போடாமல் இருப்பதன் ரகசியம் எங்கள் பாண்டியன் மீதுள்ள நம்பிக்கைதான்! அதாவது புறமுதுகு காட்டி ஓடுகிறவர்கள் மீது பாண்டியன் வேல் எறியமாட்டான்'' என்று மடக்கினார்!

தகவல்: எஸ். முகம்மது யூசுப்.



கின். இந்தச் சங்கம் பள்ளிகளில் படித்தவர்கள்தான் இன்றைய எல்லா இந்தியப் பிரஜைகளும். குடிசையில் ஆரம்பித்த பள்ளிகள் இந்த ஐம்பது வருஷங்களில் பெரிய கட்டிடங்களைப் பெற்று நன்கு இயங்குகின்றன. ஃபீஜி இந்தியர்களின் இன்றைய தார்மீக லௌகீக வளர்ச்சியில் எங்கள் தென்னிந்திய சங்கத்திற்கு முக்கிய பொறுப்பு உண்டு.''

முதல்நாள் இரவின் மனக்கிலேசத்தையெல்லாம் நான் மறந்தே போனேன். அடுத்த பதினைந்து நாட்களும் மிக சுவாரஸ்யமானவையாக இருக்கப் போகின்றன என்கிற எதிர்பார்ப்பு மனத்தில் உருவாயிற்று.

மாலை ஐந்து மணி சுமாருக்கு நாண்டியை அடைந்தோம். கிருஷ்ணமூர்த்தி விமானத்தில் மிகப் பின்னால் இருந்ததால் நான் கைப்பையுடன் முன்னால் இறங்கி நடந்தேன். விமான நிலையத்தில் ஃபீஜிக்காரர்களுடன் நிறைய இந்திய ஊழியர்கள் தென்பட்டார்கள். ஃபீஜிக்காரர்கள் உருவ அமைப்பிலும் சுருண்ட மயிரிலும் நீக்ரோக்களைப் போல் தெரிந்தார்கள். ஆனால் நிறம் நீக்ரோக்களை விடச் சற்று லேசானது.

சற்றுத் தொலைவில் ஒரு சிறிய இந்தியக் கூட்டம் கையில் பூ மாலைகளுடன் நின்றிருந்தது. அவர்கள் கையில் பிடித்திருந்த அட்டையில் **'Mrs. Vaasanthi, Welcome to Fiji'** என்றிருந்தது.

அவர்கள் ஊகத்தில், ''நீங்கள்தானே வாஸந்தி?'' என்று ஆங்கிலத்தில் கேட்டு, பிறகு ''நமஸ்காரம்'' என்றார்கள்.

ஃபீஜி இந்தியர்கள் அவ்வளவு பெரும் ஹிந்தி பேசினாலும், 'நமஸ்தே' என்று வடக்கத்தியர் வழக்கப்படி சொல்வதில்லை. 'நமஸ்கர்ரம்' என்று முழுசாகச் சொல்கிறார்கள்!

ஒவ்வொருத்தராக அறிமுகப்படுத்தப்பட்டார்கள். சங்கத்தின் பொதுச் செயலாளர் திரு என். கே. நாயுடு, திரு பனிகுரு, திரு நாயக்கர், திரு செட்டி, திரு பிள்ளை..... என்னோடு விமானத்தில் வந்து எனக்குப் பின்னால் இறங்கிய கிருஷ்ணமூர்த்தியும் இப்போது அவர்களுடன் சேர்ந்து கொண்டார்.

என்னிடம் அவர்கள் பேசும்போது ஓர் அதீதமான விநயத்துடன், மரியாதையுடன் பேசுவதை எடுத்த எடுப்பில் கவனித்தேன். இது விருந்தினர் என்ற முறையில் எனக்குக் காட்டப்படும் பிரத்யேக மரியாதை அல்ல; அங்கிருக்கும் இந்தியர்களின் சுபாவமே அது என்று பின்னால் எனக்குப் புரிந்தபோது என் வியப்பும், மகிழ்ச்சியும் கட்டுக்கடங்காமல் பெருகியது.

''நீங்கள் இன்று களைப்பாயிருப்பீர்கள். ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நாளையிலிருந்து உங்களுக்கு 'டைட் ப்ரோக்ராம்' வைத்திருக்கிறோம்'' என்றார் நாயுடு.

என்னைத் தம் காரில் ஏற்றிக் கொண்டு நான் தங்கப் போகும் இடத்திற்கு ஓட்டிச் சென்றார். ''ஃபீஜி தீவுகளின் பல பகுதிகளுக்கும் நீங்கள் செல்லும்போது அங்கங்கே தங்க ஹோட்டலில் நாங்கள் ஏற்பாடு பண்ணவில்லை. குடும்பங்களோடு தங்க ஏற்பாடு செய்திருக்கிறோம். எங்களுடைய வாழ்க்கை முறையை நீங்கள் நன்றாகக் கவனிக்கலாம்'' என்றார்.

''ரொம்ப நல்ல ஏற்பாடு'' என்றேன் நான்.

ஒரு வீட்டின் முன் நிறுத்தி, ''இங்கு மிஸஸ் வாசுதேவன் என்கிறவருடன் நீங்கள் நாண்டியில் இருக்கும்போது தங்குவீர்கள். அவருடைய கணவர் மிக அண்மையில் காலமாகிவிட்டார்'' என்றார்.

''நான் இந்தச் சமயத்தில் அவருக்கு விருந்தாளியாக வந்திருப்பது அவருக்குக் கஷ்டமில்லையோ?'' என்றேன்.

''இல்லை. இல்லை. அவரேதான் நீங்கள் தம்மோடு தங்க வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தார். அவர் பெயரும் வஸந்தி'' என்றார் நாயுடு.

''நமஸ்காரம்'' என்று சிரித்த முகத்துடன் வாசலுக்கு வந்து வரவேற்றார் வஸந்தி.

அத்தனை சின்னப் பெண்ணாக அவர் இருப்பார் என்று நிச்சயம் நான் எதிர்பார்த்திருக்கவில்லை.

(தொடரும்)

## உங்கள் நூல் நிலையங்களுக்கு அருணோதயம் நாவல்கள்

| பட்டுக்கோட்டை பிரபாகர் | ரூ. பை |
|---|---|
| நிற்காதே கவனிக்காதே | 15.00 |
| துப்பாக்கி விடு தூது | 10.00 |
| மன்னிக்கவும் வேறு வழியில்லை | 8.00 |
| இப்படிக்கு இந்து | 8.00 |
| **ராஜேஷ் குமார்** | |
| எங்கும் ஹோமா எதிலும் ஹோமா | 12.00 |
| கனவின் விலை பத்து லட்சம் | 11.00 |
| ஒரு விடியற்காலை விபரீதம் | 11.00 |
| கண்ணுக்குத் தெரியாத ஒரு வலை | 12.00 |
| இனிக்கும் இளமை இருபது | 10.00 |
| இருட்டில் பிறந்த வெளிச்சங்கள் | 15.00 |
| கொலையும் செய்வாள் பத்மினி | 17.50 |
| நேற்று நிர்மலா இன்று பரிமளா | 12.00 |
| ஆனந்த ராகம் | 18.00 |
| நிமிஷத்துக்கு நிமிஷம் | 18.00 |
| **ராஜேந்திர குமார்** | |
| ஒரு இரவு நேர ஒத்திகை | 15.50 |
| மின்னல் இடி பூகம்பம் | 12.50 |
| நிழலாக ஒருத்தி | 10.00 |
| ரயிலில் வந்த மயில் | 12.00 |
| கோடையில் பனி மழை | 18.00 |
| மகளிர் மட்டும் | 11.00 |
| ஊமைக் கரு | 10.00 |
| பாதி மனிதன் | 12.50 |
| கதவு இல்லாத கனவுகள் | 10.00 |
| என் இனிய வசந்தமே | 10.00 |
| கன்னத்தில் ஒரு முத்தம் | 8.00 |
| அதுக்கு இது அல்ல வயது | 9.00 |
| இரவல் உறவுகள் | 9.00 |
| துணையைத் தேடி | 11.00 |
| பேசும் பதினாறு | 15.00 |
| கொலை தூரப் பயணம் | 11.00 |
| சம்மந்தி | 14.00 |
| துரத்து துரத்து | 12.50 |
| ஒரு சின்னத் தவறு | 15.00 |
| கொல்லாமல் போகாதே | 11.00 |
| கண்டுபிடி கண்ணே | 16.00 |
| நினைவெல்லாம் நீ | 10.00 |
| வாழ்க வளர்க | 16.00 |
| சொர்க்கத்தைக் கடத்தியவள் | 5.00 |
| இது வளரும் பருவம் | 17.50 |
| என்றும் உன் அருகில் | 12.50 |
| உலா வரும் தேவதை | 14.00 |
| உறவு கொல்ல ஒருத்தி | 12.50 |
| கதவுக்கு இருபுறம் சொர்க்கம் | 13.00 |
| அந்தரங்கம் அலறுகிறது | 13.00 |
| தொடரும் விருந்துகள் | 10.00 |
| **அனுராதா ரமணன்** | |
| விளக்கை வெறுக்கும் விட்டில்கள் | 16.00 |
| இனியும் எல்லைத் தொடராதே | 18.00 |
| காலம் உன் கையில் | 17.00 |
| காலம் வரும் சந்திப்போம் | 18.00 |
| மன்னிக்க வேண்டும் மன்னவனே | 16.00 |
| ஆசைக் கிளியே அழகிய ராணி | 12.00 |
| முதல் காதல் | 12.00 |
| இந்த இதழில் ஆரம்பமாகிறது | 12.50 |
| ராத்திரி வந்த மான் | 22.00 |
| தாகம் தீர்க்காத மேகங்கள் | 15.00 |
| ஆகாயம் மண்ணில் வரும் | 10.00 |
| கனவுப் பிரதேசங்கள் | 15.00 |
| பாலைவனப் பறவைகள் | 12.00 |
| ஒரு வீடு இரு வாசல் | 15.00 |
| சொல் ஒன்று வேண்டும் | 16.00 |
| வசந்த காலப் பூக்கள் | 14.00 |
| நாயகன் நாளை வருவான் | 15.50 |
| ஊமைக் கதைகள் | 18.00 |
| கோபுரத்து பொம்மைகள் | 8.00 |
| மூடிக் கிடக்கிறது ஒரு நெஞ்சம் | 8.00 |
| முத்தமிட நேரமில்லை | 9.00 |
| ஒரு காதல் சாம்ராஜ்யம் | 9.00 |
| பொய்ப் பூக்கள் | 8.00 |
| சண்டிக் குதிரைகள் | 6.00 |
| வித்தியாசமான நியாயங்கள் | 16.00 |
| அழத் தெரியாத அம்பிகைகள் | 18.00 |
| விடியக் காத்திருக்கும் அரும்புகள் | 10.00 |
| **ரமணி சந்திரன்** | |
| கண்ணே கண்மணியே | 14.00 |
| காதலெனும் சோலையிலே | 20.00 |
| பூங்காற்று | 11.00 |
| நினைப்பதெல்லாம் நடந்துவிட்டால் | 8.00 |
| ஒரு கல்யாணத்தின் கதை | 7.00 |
| தொடுகோடுகள் | 11.00 |
| மதுமதி | 7.00 |
| ஒரு மலர் | 10.00 |
| **வாஸந்தி** | |
| ஒரு சங்கமத்தைத் தேடி | 13.00 |
| புரியாத அர்த்தங்கள் | 12.00 |
| ஜனனம் | 7.50 |

**தேவையான புத்தக விலையுடன் பதிவுத் தபால் செலவுக்கு ரூ 3.50 சேர்த்து M.O. அனுப்பவும்.**

# அருணோதயம்

3, கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை—600 014

போன்: 847553

# சொர்க்கத்தின் திறவுகோல்

## லக்ஷ்மி

## 15

சுவாமிநாதன் ஓசைப்படாது முன்னறைப் பக்கம் வந்தார். காலை உணவுக்குப் பிறகு, மருந்தின் மயக்கத்தில் விமலா அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தாள்.

முன்னறை நாற்காலியின் மீது அனாதையாகக் கிடந்த காலைப் பத்திரிகை, மடிப்புக் கலையாமல் இருந்தது. சாதாரண நாட்களாக இருந்தால், அதிகாலையில் தினசரிப் பத்திரிகையை வீசும் பையனின் கையிலிருந்தே 'வெடுக்'கெனப் பிடுங்காத குறையாக ஓடிச் சென்று வாங்குவார். விமலா கொணர்ந்து வைக்கும் காப்பியைக் கூடக் கவனிக்காமல், பத்திரிகைக்குள் தலையை நுழைந்துக் கொண்டால் அவர் இலேசில் வெளியே எடுக்க மாட்டார். இப்போது முடிகிறதா?

காலை எழுந்ததுமே, சமையலறை அவரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விடுகிறது. வேலைக்காரி வந்து இதர வேலைகளைச் செய்து முடித்துவிட்டுப் போவது வரை, அவர் இயந்திரமாக இயங்கினார். ''பாவம் விமலா! இப்படித்தானே இத்தனை வருடங்களாக உழைத்துச் சலித்துப் போயிருப்பாள். அதிலும் அவரது திடீர் முன் கோபங்களுக்கு ஈடு கொடுத்து, இதர சுகதுக்கங்களில் பொறுமையுடன் பங்கேற்று...'' மனைவியினிடம் அனுதாபமும் பரிவும் மேலோங்கியது அவருக்கு. ''இப்போதாவது சற்று ஓய்வாக இருக்கட்டும்'' என்று பச்சாதாபம் மேலிட்டவராய், பத்திரிகையைக் கையில் எடுத்தார்.

''காலைப் பத்திரிகையைப் பிற்பகலில் பார்ப்பதா?'' அவருக்குள்ளேயே ஒரு சிரிப்பு. வாயிற் கதவு இலேசாகத் தட்டப்படும் ஒலி கேட்டது.

வியப்புடன் எழுந்தார். ''இந்த வேளையில் யாராக இருக்கும்?'' — எண்ணமிட்டவராய்க் கதவைத் திறந்தார். களைத்துச் சோர்ந்த முகம், வாரப்படாத கூந்தலுடன் ஐஸ்வர்யா!

''நீயா? இந்த உச்சி வேளையில்... எப்படி வந்தே? குழந்தை எங்கே?'' என்று கேள்விகளைக் கேட்டபடி அவள் உள்ளே வர வழி விட்டார்.

'தொப்'பென்று நாற்காலியில் ஆயாசத்துடன் அமர்ந்தவள், ''ஆட்டோவில்வந்தேன். ஆனால், கேட்டுக்கு வெளியே எறங்கிண்டேன். இல்லேன்னா உங்க வீட்டுக்காரப் பார்வதியம்மா ஒரு 'போர்.' ஆட்டோ சத்தம் கேட்டு இங்கே ஓடிவந்து, அமெரிக்கா பத்திப் பெரிய 'லெக்சர்' அடிப்பா'' என்றாள். அலுப்புடன்.

''சாப்பிட்டியா இல்லையா?''

''ஹோட்டல்ல சாப்பிட்டுவிட்டு வரேன் பெரியப்பா.''

அவர் அதிர்ச்சியுடன் அவளைப் பார்த்தார். ''ஐஸ்வர்யா, உனக்கு என்ன ஆச்சு? ஏன் இப்படிக் குழந்தையைக் கூடக் கவனிக்காமல், வீட்டிலேயும் தங்காமல்... சே! சே! ஒரு குடும்பப் பெண் செய்கிற காரியமா இது?'' என்றார் அதட்டலாக.

ஐஸ்வர்யா விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள். சுவாமிநாதன் ஒருகணம் பயந்து போனார். அவசரமாக வாயிற்கதவை மூடித் தாழிட்டுவிட்டு அவளருகில் மற்றொரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தார்.

''ஐஸ்வர்யா! கண்ணம்மா! எதுக்கு அழறே? நீ இப்படி அழுதாயானால் என் மனசே விண்டு போயிடும் போல வலிக்கறதும்மா. அழாதே ப்ளீஸ். கண்ணைத் துடைச்சுக்கோ. நானும் கொஞ்ச நாளா உன்னைக் கவனித்துக் கொண்டு வரேன். நீ மனசுக்குள்ளே எதையோ வைத்துக் கொண்டு மருகறே,'' என்று ஆதரவுடன் அவள் தலையை வருடினார்.

''பெரியப்பா! நான்... நான் மோசம் போயிட்டேன்,'' பீறிட்டுப் பொங்கும் அழுகையை அடக்க முயன்றபடி தேம்பினாள் ஐஸ்வர்யா.

''என்னம்மா சொல்றே?'' விளங்காதவராய்ப் பீதி கலந்த குரலில் வினவினார்.

''பெரியப்பா! நான்... நான் சந்தோஷமாகவே இல்லை.'' தடைப்பட்ட குரலில் அவள் கூறியதைக் கேட்டு அரண்டு போனார் சுவாமிநாதன்.

''இந்தக் கல்யாணம் நடந்தால்தான் நான் சந்தோஷமாக வாழ்வேன். இல்லாவிடில் என் வாழ்வே இருண்டு போகும்'' என்ற முறையில், தன் காதல் கல்யாணத்திற்குப் பெரியப்பாவின் ஆதரவை நாடி ஒரு காலத்தில் ஓடி வந்தவள். இப்போது இப்படி ஒரு பிரச்னையுடன் அவரிடமே வந்திருக்கிறாளா?

கேள்விக் குறியுடன் அவளையே பார்த்தார்.

''பெரியப்பா! எனக்கு வாழ்க்கையே அலுத்துப் போய்விட்டது!''

''ஏம்மா! உன் புருஷன் ஆசையும் நேசமுமாகத்தானே உன்னை அமெரிக்கா அழைத்துக் கொண்டு போனான். கிரண் பிறந்ததும் உங்கள் சந்தோஷத்தோட அடையாளம் தானே!'' என்று கேட்டார் திகைப்புடன்.

''அங்கே ஒரே யந்திர வாழ்க்கை பெரியப்பா. வேலை, வேலைன்னு ரொம்ப தூரம் போய்டறார். என்னைத் தனியா விட்டுட்டு...'' ஐஸ்வர்யா குழந்தையைப் போல அழ ஆரம்பித்தாள்.

''ஐஸ்வர்யா! நீ ஒரு குழந்தைக்கு அம்மா வாயிட்டியே தவிர, மனசளவில் இன்னமும் ஒரு குழந்தையாகவே இருக்கேன்னு நினைக்கிறேன்,'' என்று ஆரம்பித்தார் சுவாமிநாதன்.

''இல்லே பெரியப்பா. உங்க மாப்பிள்ளை, முன்னைப் போல என்னை எங்கேயும் அழைத்துக் கொண்டு போவது கிடையாது. பல சமயங்களில் பேசறது கூடக் கிடையாது. அப்படி ஏதானும் பேசினால் மட்டும் என்ன?...''

மூக்கைச் சிந்தியபடி கைக்குட்டையால் துடைத்துக் கொண்டாள்.



''பேசுகிறேன்னு நீயே ஒப்புக் கொள்றே. பின்னே என்ன வருத்தம்?'' சுவாமிநாதன் கடுமையாக வினவினார்.

''போறுமே. என்ன பேசுவார்னு நினைக்கிறேள். ''இன்னிக்குச் சுடச் சுட வத்தக் கொழம்பு வையேன்... எனக்கு நாக்கு செத்துப் போச்சு'' அப்படிம்பார். இல்லாட்டி, ''இன்றைக்குப் பேசாமல், ஏதேனும் பழைய தமிழ்ப்பட காஸெட் கிடைச்சா, வீடியோவில் போட்டுப் பார்க்கலாமான்னு கேட்பார்.''

''இதெல்லாம் அவனுக்குன்னு சில விருப்பங்கள் இருக்குன்னு காண்பிக்கறதுதானேம்மா.''

''அப்ப எனக்குன்னு விருப்பங்களே இருக்காதா?'' — ஐஸ்வர்யா சீறினாள்.

''நீ சொன்னால்தானே தெரியும்?''

''எனக்கு டிஸ்னி லேண்ட், நயாகரா ஃபால்ஸ்னு ஒரு டிரிப் போகணும்னு ரொம்ப ஆசைப்பட்டேன் பெரியப்பா! அவர் ஒப்புக் கொள்ளலே. பணம் சேர்க்கணும். கிரண் வாழ்க்கை வசதியாக இருக்க ஒரு சேமிப்பு கணிசமா இருக்கணும்னு... சே! வேலே, வேலேன்னு ஓடிண்டே இருந்தால் நாம எப்பத்தான் வாழறது?'' — தோள்களைக் குலுக்கினாள் அவள்.

''குழந்தை, மனைவி, குடும்பம்னு ஒரு மனுஷன் பாடுபடறதுக்குப் பேர்தாம்மா வாழ்க்கை.''

''நோ பெரியப்பா! இந்தச் சின்ன வயசில அனுபவிக்கிற சந்தோஷங்களே அனுபவிக்கணும். வார விடுமுறைங்கள்லே வெளியே போய், குஷியா ஊர் சுத்திப் பார்த்து மகிழ வேணுமா? வீடும், வத்தக்குழம்பும்தான் பெரிசுன்னு உட்கார்ருகிற மனுஷரோட எப்படி வாழ்க்கை நடத்துவது? அவரோட எண்ண அலேகள், என்னோட எண்ண அலேகளோட சரிசமமா இயங்கறதில்லே...''

''சபாஷ்! இப்படிப்பட்ட தத்துவங்கள், விஞ்ஞான ஆராய்ச்சிகளெல்லாம் நிறையவே தெரிஞ்சுண்டிருக்கே நீ!'' எரிச்சலேக் கட்டுப்படுத்தியவராய்க் கூறினார் சுவாமிநாதன்.

''ஆமாம் பெரியப்பா. நாங்க இந்தக் காலத்துப் பெண்கள். முன்னேப் போல் வெறும் விளேயாட்டுப் பொம்மையாகவோ, அலங்காரப் பதுமையாகவோ இருக்க மாட்டோம். புருஷனுக்கு எங்ககிட்டே, சரிசமமா மதிப்புக்குடுத்து சந்தோஷப்படுத்தத்தெரியல் லேன்னு...?'' அவள் மூச்சுவிட்டு நிறுத்தினாள்.

''தெரியல்லேன்னு?''

''பிரிஞ்சுட வேண்டியதுதான்,'' கண்டிப்புடன் கூறிய அவள் குரலேக் கேட்டு அதிர்ந்து போனார் அவர். ''ஐஸ்வர்யா! சுயநினேவோடத்தான் பேசறியா?'' — அதட்டலாகக் கேட்டார்.

''நன்னு நினேச்சு, யோசிச்சுப் பார்த்துத்தான் பேசறேன் பெரியப்பா. எனக்கு விவாகரத்து வாங்கணும். இந்தக் கல்யாணத்தை நீங்கதான் முடிச்சு வச்சேள்...''

''இப்ப என்னேயே வெட்டிவிடச் சொல்றே?'' என்று கடுகடுத்தார்.

''ஆமாம். ஏன்னு அம்மாவுக்குத்தெரிஞ்சா பரிகாசம் பண்ணுவா. அதனுலே உங்களேத் தேடி வந்திருக்கேன். இந்தப் பிரச்னேக்கு ஒரு முடிவு வேணும் பெரியப்பா'' அவரது கைகளேப் பலமாகப் பிடித்துக் கொண்டாள் ஐஸ்வர்யா.

''ஐஸ்வர்யா இங்கே இருக்காளா? அவ அம்மா கிட்டே இருந்து 'போன்' வந்திருக்கு' பார்வதி அம்மாளின் குரல் உரத்து வெளியே கேட்டது.

''அப்பா! பூஜை வேளேக் கரடி...'' அலுப்புடனும், எரிச்சலுடனும் கூறியபடி எழுந்தாள் ஐஸ்வர்யா. தம் கரங்களே அதற்குமுன் அவசரமாக விடுவித்துக் கொண்டு ஓடிச் சென்று கதவைத் திறந்தார் சுவாமிநாதன்.

''சொல்லாமல் பெரியப்பாவின் வீட்டுக்கு வந்துட்டே போல இருக்கு. உங்கம்மா கூப்பிடறா. பெத்த மனசு. எத்தனேதான் பெண்களுக்கு வயசானுலும் இன்னும் சின்னக் குழந்தையா நினேக்கத் தோணறது'' பார்வதியம்மாள் படபடவெனப் பொரிந்தாள்.

''ஆமாம். எங்க ஐஸ்வர்யா, குழந்தை மாதிரிதான்,'' என்றவரை முறைத்துவிட்டு வெளியே சென்றாள் அவள். பார்வதியம்மாள் இரண்டு நிமிடம் பேசிவிட்டு வருவதற்குள், திரும்பிவிட வேண்டும் என்ற அவசரம் அவளுக்கு.

பார்வதியம்மாள் நலம் விசாரித்துவிட்டுத் திரும்பியதும், சுவாமிநாதன் நிதானமாகச் சிந்திக்கத் துவங்கினார்.

இந்தக் காலத்து இளவயதுப் பெண்கள்

## அன்று அப்படி! இன்று இப்படி!




காரல் மார்க்ஸ் லண்டனில் இருந்தபோது ரயில்வேயில் வேலே வேண்டி விண்ணப்பம் செய்தார். கையெழுத்துச் சரியில்லே என்ற காரணத்திற்காக அவர் விண்ணப்பத்தை ரயில்வே நிர்வாகம் நிராகரித்துவிட்டது. ஆனுல் அதே காரல் மார்க்ஸின் கையெழுத்துப் பிரதிகள் ஒவ்வொன்றும் இப்போது லட்சக்கணக்கான ரூபாய்களுக்கு ஏலம் போகின்றன!

— ப்ரியா பாலு.

எல்லோருமே ஐஸ்வர்யாவைப் போல அவசரக்காரர்களாக இருப்பார்களோ? கணவன், மனைவி என்று வந்துவிட்டால், குடும்பம், பொறுப்பு என்பதை ஏன் ஒரு சில பெண்கள் மறந்து போகிறார்கள்?

முன்போல், தங்களது சுதந்திர மன நிலையை இழந்து, கணவன் குடும்பத்தில் கொத்தடிமை ஆவதைப் பல பெண்கள் விரும்புவதில்லைதான், அவர்களது படிப்பு, கலை ஆர்வம் யாவற்றையும் ஒரு வட்டத்திற் குள்ளேயே பாழடிக்க அவர்கள் எதிர்ப்புத் தெரிவிப்பது நியாயம்தான். ஆனால் அதே சமயம் ஐஸ்வர்யா போன்று செல்லமாக, உயர்ந்த அந்தஸ்தில் வளர்ந்த பெண்கள்... அதிலும் காதல், கத்தரிக்காய் என்று தானே தேடிச் சென்று கணவனை அடைந்த பெண் கள்... வாழ்க்கையை வெறும் திரைப்படக் காதலர்கள் வாழ்வது போல நினைக்கிறார் களோ? இல்லாவிட்டால், ஐஸ்வர்யாவிற்கு வாழ்க்கை அத்தனை விரைவில் கசந்து போவா னேன்?

சதா சர்வகாலமும், கணவன் வெறும் காதலனைப் போல, வெளியே சுற்றவும், பேசி மகிழவும் என்று ஐஸ்வர்யா தப்புக் கணக்குப் போட்டிருப்பது ஏதனால்? அவள் வளர்ந்த சூழ்நிலையா? வளர்க்கப்பட்ட விதமா? அல்லது அவளிடம் இயல்பாகக் காணப்படும் பிடிவாதமா?

'ஐஸ்வர்யாவை இப்படியே விடக்கூடாது. வாழ்க்கை என்பது விளையாட்டல்ல. வாழை யடி வாழையாக வரும் ஒரு பந்தம். அதிலும் அவளை மணந்து கொண்டிருப்பவன், சாதா ரண மட்டத்திலிருந்து வந்த பையன். பிறரது கஷ்டங்களைப் புரிந்து கொண்டு பண்போடு நடக்கக் கூடியவன். அவனைப் போய்... குற்றம் கண்டுபிடித்து... ஹூம்!' பெருமூச்செறிந் தார் அவர்.

"ஹில்லி! என்னிஷ்டம். எங்கேயோ சாப் பிடுவேன், போவேன். இதுக்கு ஒரு 'போன்' பண்ணித் துப்புத் துலக்கணுமா?" வெடித்த படி உள்ளே நுழைந்த ஐஸ்வர்யாவை உறுத்துப் பார்த்தார் அவர்.

"ஏன் பெரியப்பா அப்படிப் பார்க்கி றேள்?" ஐஸ்வர்யா சிறிது கலக்கத்துடன் கேட்டவள் அருகில் வந்தாள்.

"வாசற் கதவை மூடிவிட்டு இப்படி என் பக்கத்தில் வந்து உட்கார்" என்ற அவர் குரலில் கண்டிப்பு. ஐஸ்வர்யா கலவரத் துடன் அவர் சொன்னதைச் செய்தாள்.

"உனக்கு விவாகரத்து வேணும்னு ஆலோ சனை கேட்க வந்திருக்கே இல்லையா?"

"ஆமாம் பெரியப்பா. இனிமேல் என்னால் அவரோடு வாழ முடியாது."

"விவாகரத்துங்கறதுக்குக் கூட சில அடிப் படையான, பலமான காரணங்கள் இருக்க ணும். 'குறைந்தபட்சம், பரஸ்பரம் விடுதலை கோரியிருக்கணும். இப்ப உன்னோட காரணம் என்ன?"

"பெரியப்பா."

"கேட்டதற்குப் பதில்..." — அடிக் குரலில் [illegible] அவர்.

ஒருவர்: "பெண்மேல் எவ்வளவு பிரியம் வைத் திருந்தால் இப்படிக் கண்ணீர் விடுவார்?"

மற்றவர்: "பெண்ணைப் பிரிய மனமில்லாமல் விடுகின்ற கண்ணீர் அல்ல ஐயா அது! வர தட்சிணைக்காக வாங்கிய கடனை எப்படி அடைப்பது என்று அழுது கொண்டிருக் கிறார்."

— அ. சோமானந்தன்.



"உன் புருஷன் குடிகாரனா? உன்னை அடித்து இம்சித்தானா? அல்லது வேறு ஒருத்தி யுடன் வாழ்கிறானா? இல்லை, ஏதேனும் போதைப் பொருளுக்கு அடிமையாகி மீள முடியாமல் இருக்கிறானா?"

"எதுவும் இல்லை பெரியப்பா" ஐஸ்வர்யா மெலிதாக மறுப்புத் தெரிவித்தாள்.

"அப்ப... உன்னோட இஷ்டப்படி அவன் கைகட்டி நிக்கலே. நீ சொன்னியே அந்த எண்ண அலைகள், அதன்படி, கிளப், பார்ட்டி, பிக்னிக்னு போகலே. அது தானே?"

"பெரியப்பா!"

"ஐஸ்வர்யா! உன்னைப் பத்தி நான் ஒரு காலத்தில் ரொம்பப் பெருமைப்பட்டிருக் கேன். பெரிய மனுஷா வீட்டுப் பெண்ணா வளர்ந்தும் ஆடம்பரத்துக்கு ஆசைப்படா மல் அடக்கமான பையனைப் பார்த்துக் கல் யாணம் செய்துண்டிருக்கா. வாழ்க்கையில பரஸ்பரம் விட்டுக் கொடுத்துக் கணவனை உயர்ந்த நிலைக்கு உயர்த்தி, லட்சியப் பெண்ணா வாழ்வேன்னு கனவு கண்டேன். ஆனா... நீ வெறும் கேளிக்கைகள்தான் வாழ்க்கைன்னு நினைச்சுட்டியே. அதை நினைக்கறச்சே எனக்குப் பரிதாபமா இருக்கு..."

"நீங்க என்ன சொல்றேள் பெரியப்பா?" குழப்பத்துடன் கேட்டாள் அவள்.

"வார விடுமுறைக்கு பிக்னிக் போறதோ, ஐந்து நட்சத்திர ஓட்டல்லே விருந்து சாப்பிட றதோ மட்டும் வாழ்க்கை இல்லேம்மா. காத லிச்சு ஒருத்தனைக் கைப்பிடிச்சே. அதே தைரி யம் அவன் காரியம் யாவிலும் கைகொடுக் கிறதிலேயும் இருக்கணும். நன்னா யோசிச்சுப் பார்த்துவிட்டு என்கிட்டே வா. ஒரு வாரம் கழிச்சு உன் விவாகரத்தைப் பத்திப் பேசிக்க லாம்," என்றார் ஆவேசமாக.

ஐஸ்வர்யா விழி பிதுங்க அவரையே பார்த்தாள்.

(தொடரும்)

### எப்படி மறக்க முடியும்?

கடந்த தீபாவளி சமயத்தில் அடித்த புயலின்போது பெரும்பாலான ஆசிரியர்கள் சிறையில் இருந்ததால், அவர்களுடைய வீடுகளிலெல்லாம் தீபாவளி என்பதே கேள்விக்குறியாகிப் போனது. அப்படி எங்களூரிலுள்ள ஆசிரியர் வீட்டிலும் தவித்த போது, நான் இடுப்பளவு வெள்ளத்தையும் பொருட்படுத்தாமல் அடுத்த ஊருக்குச் சென்றுபண்டிகைக்குத்தேவையான சாமான்களை வாங்கி வந்து கொடுத்து உதவினேன். அது இன்னமும் என் மனத்துக்கு மகிழ்ச்சியளிக்கிறது.

—ஜி. பாலகிருஷ்ணன், சேந்தமங்கலம்.

### பஸ்ஸிலேயே ப்ரிமாறினேன்!

விழுப்புரத்திலிருக்கும் அக்கா மகளின் வளைகாப்பு வைபவத்திற்காக நிறைய அதிரசம், முறுக்கு ஆகியவற்றைச் செய்து எடுத்துக் கொண்டு சென்றேன். விழுப்புரத்திற்கு முன்பே ஒரு பெருமழை காரணமாய்ச் சிற்றாறு ஒன்று 'சாலையில் வாகனங்களை செல்ல முடியாதபடி வெள்ளப் பெருக்



கெடுத்து ஓடியது. வெள்ளம் சிறிது வடியும் வரை காத்திருந்து எங்கள் பஸ் புறப்படுவதற்குச் சுமார் ஏழு மணி நேரத்திற்கு மேல் தாமதமானது. அப்போது பஸ்ஸுக்குள் பசியால் அழுத குழந்தைகளுக்கெல்லாம் எடுத்துச் சென்ற அதிரசத்தையும், முறுக்கையும் கொடுத்து உதவிய சந்தோஷத்திற்கு இணைதான் ஏது?

— எஸ். மங்கையர்க்கரசி, மதுரை — 1.

### பவர்கட் வாங்கிய பலி?

என் நண்பர் ஊர் போயிருந்தார். வெளிக் கதவின் காட்ரெஜ் பூட்டைப் பூட்டிக் கொண்டு நண்பரின் மனைவியும், குழந்தைகளும் படுத்திருந்தபோது, திடீரென்று வெள்ளம் வீட்டுக்குள் வரவே, மனைவி திடுக்கிட்டு எழுந்திருக்கிறார். எழுந்த பரபரப்பில் படுக்கை கலைந்து தலையணைக்கடியிலிருந்த சாவி வெள்ளத்திற்குள் விழுந்து விட்டிருக்கிறது. அப்போது பவரும் 'கட்' ஆகிவிட்டதால் சாவியைத் தேட முடியவில்லை. கதவை உடைத்துக்கொண்டுவெளியில்வரவும்முடியவில்லை. இரண்டு நாட்கள் கழித்து வந்த நண்பர் கதவை உடைத்துப் பார்த்தபோது, மனைவியும் குழந்தைகளும் சடலமாகி விட்டிருந்தார்கள். பாழாய்ப் போன அந்தச் சாவியும் அவர்கள் பக்கத்திலேயே கிடந்திருக்கிறது.

— எஸ். பார்த்தசாரதி, சென்னை — 17.

### தெப்பத்தால் கிடைத்த பாராட்டு!

எங்கள் தெரு சற்றுப் பள்ளமான பகுதியாதலால் மழை பெய்த உடனேயே வெள்ளம் வந்துவிடும். சென்ற மழையின்போது அப்படி வந்த வெள்ளமும் சீக்கிரத்திலேயே வடிந்து போய்விடுமென்று அனைவரும் வீட்டுக்குள்ளேயே இருந்தனர். எங்கள் தெருவிலுள்ள மாணவர்கள் அனைவரும் எங்கள் வீட்டில் இருந்தனர். நாங்கள் அனைவரும் எப்படியும் இந்த வெள்ளம் வடியாது என்ற நம்பிக்கையில் கிடைத்த மரக்கட்டைகளையெல்லாம் ஒன்று சேர்த்து ஆணியடித்துத் தெப்பம் ஒன்று செய்தோம். எதிர்பார்த்தது போலவேவெள்ளம்அதிகரித்துக்கொண்டே வந்தபோது, தெருவிலுள்ள அனைவரையும் இருவர் இருவராகத் தெப்பத்தில் ஏற்றிச் சென்று தெருவின் அடுத்த முனையில் பத்திரமாக இறக்கினோம். மறுநாள் அனைவரும் எங்களைப் பாராட்டினார்கள்.

— ஐ. சேவியர் கபிலன், சென்னை — 95.

### மறக்க முடியாத தலை தீபாவளி!

விடிந்தால் எங்களுக்குத் தலைதீபாவளி. ஐந்து மணி நேரத்தில் கடலூரை அடைந்து விடலாம் என்ற எண்ணத்தில் நானும் என் கணவரும் சென்னையிலிருந்து புறப்பட்டோம். ஆனால் ஆங்காங்கே வெள்ளத்தில் மூழ்கிய சாலைகள், ஆளையே விழுங்கும் பள்ளங்கள், பழுதடைந்த பாலங்கள்... என்று



ப்ளோபிளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

எஸ். மங்கையர்க்கரசி,
73, வடக்கு கிருஷ்ணன் கோவில் தெரு.
மதுரை — 625 001.

ஒவ்வொன்றாக எங்கள் பஸ் கடந்து செல்ல வேண்டியிருந்ததால், காலை பத்து மணிக்குப் புறப்பட்ட நாங்கள் இரவு பத்து மணிக்கும் பஸ்ஸுக்குள்ளேயேதான் இருந்தோம். பிறகு எப்படியோ ஓட்டுனரின் திறமையால் நள்ளிரவுக்குமேல் கடலூர் சென்றடைந்ததை என்னால் எப்போதும் மறக்கவே முடியாது!

— திருமதி ஹேமலதா ரங்கநாதன்,
கடலூர் — 1.

### கவனிக்க மறந்த குழந்தை!

புயல் வீசிய அன்று நான் உள்ளகரத்திலுள்ள என் சகோதரர் வீட்டில் இருந்தேன். தெரு முழுவதும் முழங்கால் அளவுக்கு வெள்ளம் வந்து, எதிர் வீட்டினுள் நுழைந்தபோது, அவர்கள் அனைவரும் தங்கள் வீட்டிலிருந்த சாமான்களையெல்லாம் அவசரம் அவசரமாகப் பரண்மேல் ஏற்றிக் கொண்டிருந்தார்கள். அந்த அவசரத்தில் தங்களுடைய ஒன்றரை வயதுக் குழந்தையை மறந்துவிட்டார்கள்போலும்! தெருவெள்ளத்தால் அடித்துச் செல்லப்படவிருந்த அக்குழந்தையைக் காப்பாற்றினேன்.

— வி. ராதாகிருஷ்ணன், சென்னை 78.

### பாட்டியை வணங்கினேன்!

புயல் மழைச்சமயத்தில் சைதாப்பேட்டை — ஜோன்ஸ் ரோடிலுள்ள என் பாட்டி வீட்டில் இருந்தேன். மடி, ஆசாரம் என்று மற்ற

வர்களை விரட்டி அடிக்கும் என் பாட்டி, அப்போது எதிர்ப்பக்கத்துக் குடிசை வாழ் மக்களுக்குத் தன் வீட்டிலேயே தங்க இடமளித்து, அந்தச் சேரிக் குழந்தைகளுக்குக் கஞ்சி வைத்துக் கொடுத்து, முடிந்தவரை அம்மக்களுக்கும் சமைத்துப் போட்டு உதவினார். எத்தனைதான் மடி, ஆசாரம் என்று ஒதுங்கினாலும் இந்த மாதிரியான ஆபத்துச் சமயத்தில் உதவும் உயர்ந்த உள்ளம் கொண்ட என் பாட்டியின் கால்களில் விழுந்து வணங்கினேன்.

— ஆர். பிரபாவதி, புதுக்கோட்டை.

### எதிர்பாராமல் உதவினேன்!

புயல் மழை ஓய்ந்த பிறகு ஒருநாள் அடையாறு பஸ் நிலையத்தில் நின்றிருந்தேன். அப்போது ரோட்டோரத்தில் ஒதுங்கியிருந்த குப்பையில் மடித்துக் கிடந்த ஒரு பேப்பரைச் சந்தேகத்தோடு எடுத்துப் பார்த்தேன். அது ஒரு நூறு ரூபாய் நோட்டு! யாருடையதோ அது மழையில் நனைந்து சேற்றில் புரண்டு குப்பையில் கிடந்தது. அதைச் சுத்தம் செய்து, ஹோட்டலுக்குச் சென்று டிபன் வாங்கி ஏழைக் குழந்தைகளுக்கு விநியோகம் செய்தேன். அப்போது அந்தக் குழந்தைகள் அடைந்த ஆனந்தத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்தேன்.

— விஜிஷா, சென்னை — 33.

### வேலைக்கு உதவிய திருப்தி!

சொந்த வேலை காரணமாகச் சென்னை வந்திருந்த நான், புயல் காரணமாக ஊர் திரும்ப முடியாமல் அவதிப்பட்டுக் கொண்டிருந்தேன். மிகுந்த சிரமத்திற்கிடையில் ஒரு ஆம்னி பஸ்ஸில் ஒரு ஸீட் ரிசர்வ் செய்து பயணப்படும்போது, மறுநாள் திருநெல்வேலியில் நடக்கவிருக்கும் இண்டர்வியூவுக்குச் செல்ல பஸ்ஸில் இடம் கிடைக்காமல் ஓர் இளைஞன் தவித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு என் டிக்கெட்டைக் கொடுத்து அனுப்பினேன். பிறகு நான் திருநெல்வேலி செல்லும் வேன் ஒன்றில் அதிர்ஷ்டவசமாய் இடம் பிடித்துச் சென்ற போது, திருச்சிக்கருகில் அந்த இளைஞன் சென்ற பஸ் பிரேக் டௌன் ஆகி நின்றிருந்தது. அந்த இளைஞனும் இருளில் சோகமாய் அமர்ந்திருந்தான். நான் அந்த பஸ் கண்டக்டர், வேன் டிரைவர் ஆகியோரின் ஒத்துழைப்புடன் அவனை வேனில் அனுப்பி வைத்து விட்டுத் தாமதமாக பஸ்ஸில் சென்றேன். பிறகு அந்த இளைஞன் அந்த இண்டர்வியூவில் செலக்ட் ஆன விஷயத்தை என்னிடம் நேரில் வந்து சொன்னபோது ஓர் இளைஞனின் வேலை வாய்ப்புக்கு உதவிய திருப்தி எனக்கு ஏற்பட்டது.

— எஸ். சங்கரகப்பு, திருச்செந்தூர்.

### சமயத்தில் உதவிய சகதி!

சென்றதீபாவளி சமயத்தில்பெய்த அடைமழையினால் எங்கள் தெரு மண் ரோடு முழுவதும் பயங்கரமான சகதியாகிவிட்டது. அதில் எங்கள் தெரு வாசிகளைத் தவிர வேறு யாரும் மேடு பள்ளம் பார்த்துக் கடந்து சென்றுவிட முடியாது. அந்த நேரம் பார்த்து எப்படியோ எங்கள் வீட்டில் ஒரு திருடன் நுழைந்துவிட்டான். நாங்கள் கூச்சல் போட்டதும் அவன் பயந்து வெளியே ஓடி முழங்கால் அளவுச் சகதியில் சிக்கிக் கொண்டான். எங்கள் கூச்சலைக் கேட்டு ஓடிவந்த மற்றவர்களும், நாங்களுமாக அவனைச் சுலபமாகப் பிடித்துவிட்டோம்!

— ஏ. சுதா, கும்பகோணம்.

### கடவுளாய் நினைத்து வணங்கினேன்!

11.11.85 அன்று தீபாவளி. மழையோ விடாமல் கொட்டிக் கொண்டே இருக்கிறது. நிறைமாத கர்ப்பிணியான என் மனைவி, நள்ளிரவின் போது பிரசவ வலியால் துடிக்க ஆரம்பித்து விட்டாள். நான் ஓடிச் சென்று, ஒரு சுற்றுலா கார் டிரைவரை எழுப்பி அவருடைய காரில் என் மனைவியை ஏற்றிக் கொண்டு நுங்கம்பாக்கத்திலுள்ள நர்ஸிங் ஹோமுக்குச் சென்றேன். வலியால் துடித்த என் மனைவியைக் கண்டு எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக் கொண்டேன். இரவு ஒரு மணிக்கு நர்ஸிங் ஹோம் சென்றடைந்த போது, அங்கிருந்த டாக்டர் கடும் மழையையும் பொருட்படுத்தாது மற்ற டாக்டர்களை அழைத்து வந்து வெற்றிகரமாக அறுவைச் சிகிச்சை செய்தார். பெண் குழந்தை பிறந்தது. இந்த 'த்ரில்'லான அனுபவத்தையும் கடவுள்போல் உதவிய டிரைவரையும், டாக்டர்களையும் எப்படி மறக்க முடியும்?

— ஜி. சேகர், சென்னை — 92.



"தியேட்டரை விட்டு வெளியே வரும் ரசிகர்களின் கண்கள் கலங்கி இருக்குதே.... படத்தின் முடிவு மனத்தைத் தைக்கிற மாதிரி சோகமாக இருக்கோ?"

"இல்லை.... படத்தில் ஒளிப்பதிவு மட்டம்.... படத்தை உற்றுப் பார்த்ததால் எல்லோருக்கும் அப்படி இருக்கு...."

— என். எஸ். வி. குருமூர்த்தி.

## 6

சந்திரபோஸின் இருதயம் உச்சபட்சத் துடிப்பில் இருந்தது. பிடரிக்குக் கீழே ஏராளமாய் வியர்த்து முதுகுப் பரப்பில் சின்ன சின்னக் கால்வாய்களாய் வழிந்தன.

கர்ச்சீப்பால் முகத்தை ஒற்றிக் கொண்டபடி — தன் அறைக்குள் நுழைந்து மேஜையின் மேலிருந்த இண்டர்காமின் ரிஸீவரை எடுத்துக் குரல் கொடுத்தான்.

''செண்ட்ரி செல்?''

''எஸ் ஸார்.''

''நான் சந்திரபோஸ் பேசறேன்.... செல்லில் இருக்கிற யாராவது ஒருத்தர் அந்த விசிட்டர்ஸ் புக்கைக் கொண்டு வாங்க.... இண்டர்வியூவுக்கு வந்த ஒரு பொண்ணைத் தேடிக்கிட்டு அந்தப் பொண்ணோட அப்பா வந்ததாச் சொன்னீங்களே..., உள்ளே அனுப்பிச்சிட்டீங்களா?''

''வந்திட்டிருக்கார் ஸார்.''

''நீ செண்ட்ரியில நின்னுகிட்டு என்ன வேலை பார்க்கிறே? இண்டர்வியூவுக்கு வந்த எல்லாப் பொண்ணுகளுமே போயிட்டாங்க.....அந்தயாமினிப் பொண்ணு உள்ளே இருக்கிறதாச் சொல்லியிருக்கியே, அந்தப் பொண்ணு வெளியே போனதை நீ நோட் பண்ணலையில்லையா?''

''ஸாரி ஸார். அந்தப் பொண்ணு வெளியே போகவேயில்லை. செல்லில் ஆள் மாத்தி ஆள் நின்னுகிட்டுத்தான் இருக்கோம் ஸார்.''

''நான்சென்ஸ்.... அந்தப் பொண்ணு யாமினி அரைமணி நேரத்துக்கு முன்னாடியே கம்பெனியை விட்டுப் போயாச்சு.... உடனே எண்ட்ரி போட்டு விசிட்டர்ஸ் புக்கை என்னோட அறைக்குக் கொண்டுகிட்டு வா.''

''சரி ஸார்.''

சந்திரபோஸ் — ரிஸீவரை 'டப்'பென்று பொருத்திவிட்டு, முகம் முழுவதும் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்தான். கண்ணாடிக் கதவு வழியே, வெளியே இலேசாய்ப் பெய்து கொண்டிருந்த மழையில் குடையை விரித்தபடி கம்பெனியின் அசுரத்தனமான கட்டிடத்தைப் பார்த்து வியந்து கொண்டே வந்து கொண்டிருந்தார் திருஞானம்.

போர்டிகோ படிகள் ஏறியதும், ஈரம் சொட்டும் குடையை மடித்து, அதன் ஈரம் கீழே சொட்டினால் யாராவது ஏதாவது சொல்வார்களோ என்கிற பயத்தோடு சுற்றும் முற்றும் பார்த்தார். ஹாலில் யாரும் இல்லாமல் போகவே, மெதுவாய் நடந்து உள்ளே போய், யாராவது பார்வைக்குத் தட்டுப்படுவார்களா என்று எட்டிப் பார்த்தார்.

அவர் அப்படி பார்த்துக் கொண்டிருக்கும் போதே, கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு, சட்டென்று வெளிப்பட்டு அவரை நோக்கி வந்தான் சந்திரபோஸ்.

திருஞானம் தன் கையிலிருந்த குடை ஈரமாய் இருப்பதையும் பொருட்படுத்தாமல், கக்கத்தில் இடுக்கிக் கொண்டு சந்திரபோஸை, பெருமாளைச் சேவிப்பது போல் சேவித்தார். ''நமஸ்காரம்....''

சந்திரபோஸ் போலித்தனமான மரியாதையோடு அவரருகே குனிந்தான். ''நீங்க யாரை ஸார் பார்க்கணும்?''

''என்னோட டாட்டர் காலையில் இந்தக் கம்பெனிக்கு இண்டர்வியூவுக்கு வந்தா. இந்த நிமிஷம் வரைக்கும் வீடு திரும்பலைன்னு கவலைப்பட்டுத் தேடிக்கிட்டு வந்தேன்.''

சந்திரபோஸ் கண்களில் ஆச்சரியம் காட்டினான். ''இண்டர்வியூவுக்கு வந்தாங்களா? அவங்க பேரென்ன?''

''யாமினி.''

''யா... மி... னி...'' என்று உதட்டுக்குள் முணகியவன், முகத்தில் சட்டென்று ஒரு பாவனைத்தனமான மலர்ச்சியைக் காட்டினான். ''ஓ.... அந்தப் பொண்ணு.... இன்னிக்கு நடந்த இண்டர்வியூவிலே உங்க டாட்டர்தான் லாஸ்ட் காண்டிடேட். இப்பத்தான்.... அரைமணி நேரத்துக்கு முன்னாடிதான் அவங்க இண்டர்வியூவை முடிச்சுக்கிட்டு வெளியே போனாங்க....''

''செண்ட்ரி கேட்ல கேட்டப்போ, வெளியே போகலைன்னு சொன்னாங்களே? வெளியே போக இந்தக் கம்பெனியில வேறே பக்கம் ஏதாவது கேட் இருக்கா?''

''இல்லை, ஒரே கேட்தான். செண்ட்ரிமென் எண்ட்ரி போட மறந்திருப்பாங்க. பை...த...வெ உங்களுக்கு ஒரு ஸ்வீட் நியூஸ்.''

திருஞானம் புரியாமல் அவனைப் பார்த்தார்.

அவன் புன்னகையோடு சொன்னான். ''நானும் கம்பெனியோட எம்.டி.யும் இப்பத்தான் பேசி முடிவு பண்ணினோம்—இன்னிக்கு நடந்த இண்டர்வியூவிலே உங்க டாட்டர் யாமினியைத்தான் செலக்ட் பண்ணியிருக்கோம். மொத்தம் நூத்தி முப்பத்தியேழு பேர்

# A ஃபார் ஆப்பிள்
# M ஃபார் மர்டர்

ராஜேஷ்குமார்

வந்திருந்தாங்க. அதுல ஒரு பத்துப் பேருக்கு இடையே ஹெல்த்தி காம்படீஷன்.... ஓர் அரை மார்க் வித்தியாசத்துல உங்க டாட்டருக்கு இந்தசுபீரியர் போஸ்ட் கிடைச்சிருக்கு! மீதி நாலு போஸ்ட்டுக்கு இன்னொரு நாள் இண்டர்வியூ நடத்தப் போறோம்....

அவன் சொல்ல சொல்ல —

சந்தோஷத்தில் மூச்சுக் காற்றைச் சுவாசிக்க முடியாமல் திணறினார் திருஞானம். யாமினியின் கல்யாணக் கோலம் கண்களை நிறைத்தது. அணிந்திருந்த மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

''ரொம்ப தேங்க்ஸ் ஸார்.''

சந்திரபோஸ் சிரித்தான். ''எதுக்காக தேங்க்ஸ் சொல்றீங்க ஸார். ப்யூர்லி மெரிட் பேஸிஸ்ல உங்க டாட்டர் செலக்டாகியிருக்காங்க. வெரி ஷ்ரூட் கேர்ள். எந்தக் கேள்வியைக் கேட்டாலும், கேள்வியோட கடைசி வாசகம் முடியறதுக்கு முன்னாடியே, முகத்துக்கு மேலே வந்து பதில் விழுறது ஸார். எம்.டி. ரொம்பவும் இம்ப்ரஸ் ஆயிட்டார். உங்க டாட்டரோட இண்டலிஜென்ஸைப் பார்த்துவிட்டு ஸ்கேல் ஆப் பேயைக் கூட ரிவைஸ் பண்ணினார். வேலைக்குச் சேர்ந்த முதல் மாசமே உங்க டாட்டர் வாங்கப் போற 'பே' என்ன தெரியுமா ஸார்? எல்லா அலவன்ஸூம் சேர்த்து ஆயிரத்து எழுநூறு ரூபா....''

''ஹம்மாடி.''

திருஞானம் நெஞ்சில் கைவைத்து சந்தோஷத் திகைப்புத் திகைத்தார்.

''ஸ... ஸார்!'' பேச்சு வராமல் சந்திரபோஸைக் கும்பிட்டார்.

''வாங்க.... என்னோட அறைக்குப் போகலாம்.''

''வேண்டாம் ஸார். நான் புறப்படறேன்.''

''எம்.டி.யைப் பார்க்கறீங்களா ஸார்? வாங்க! யாமினிக்கு நீங்க அப்பான்னு தெரிஞ்சா எம்.டி. ரொம்பவும் சந்தோஷப் படுவார்.''

சந்திரபோஸ் உதட்டில் ஒட்ட வைத்துக் கொண்ட புன்னகையோடு, திருஞானத்தை அழைத்துக் கொண்டு பிரபுவின் அறையை நோக்கிப் போனான்.

கதவின் முன்னால் நின்று, ஆட்காட்டி விரலை வளைத்துக் கதவைத் தட்டினான்.

''டொக்.''

''எஸ் கம் இன்.''

திருஞானத்தோடுஉள்ளேபோனான்சந்திரபோஸ். பிரபு பைப்பைப் பற்ற வைத்துக் கொண்டு, மனத்திலிருக்கும் படபடப்பை வெளியே காட்டிக் கொள்ளாமல் புகைவிட்டார். ரிவால்விங் நாற்காலியில் அப்படியும் இப்படியுமாய்ச் சுழன்றார்.

''என்ன மிஸ்டர் சந்திரபோஸ். இன்னும் நீங்க வீட்டுக்குக் கிளம்பலையா? அப்பவே உங்களைப் போகச் சொல்லிவிட்டேனே!''

''புறப்படறதுக்காகத்தான் இருந்தேன் ஸார். அதுக்குள்ளே மிஸ் யாமினியோட ஃபாதர் வந்துட்டார். ஹி ஈஸ் மிஸ்டர் திருஞானம். ஃபாதர் ஆப் மிஸ் யாமினி.''

''யாமினி?''

''எஸ் ஸார். இன்னிக்கு நடந்த இண்டர்வியூவிலே செலக்ட்டான காண்டிடேட்... மிஸ் யாமினி அரைமணி நேரத்துக்கு முன்னாடிதான் இண்டர்வியூவை முடிச்சுகிட்டுப் போனாங்க. அந்தவிவரம்தெரியாமே, இவரும் டாட்டரைத் தேடிக்கிட்டு வந்துட்டார். விசிட்டர்ஸ் புக்கைச் சரியா பார்க்காம நம்ம கம்பெனி செண்ட்ரி ஆளும் யாமினி உள்ளே இருக்கிறதாச் சொல்லிட்டாங்க...''

''ஐஸிட்.... உட்காருங்க மிஸ்டர் திருஞானம்.... உங்க டாட்டர் யாமினிக்கு ஐக்யூ அதிகம். வெரி இண்டலிஜெண்ட் கேர்ள்.... உங்க டாட்டரைத்தான் நாங்க செலக்ட் பண்ணியிருக்கோம். அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரைக் கூட டைப் பண்ணச் சொல்லிட்டேன்....'' என்று பேசிக் கொண்டே போன பிரபு சட்டென்று முன்னுக்குச் சாய்ந்து இண்டர்காமின் ரிஸீவரை எடுத்தார்.

''மிஸ் கீதா ஒரு நிமிஷம் வந்துட்டுப் போங்க.'' சொல்லி ரிஸீவரை வைத்தபடி திருஞானத்தை ஏறிட்டுப் பார்ப்பதற்குள், கீதா கூர் பென்சிலோடும், பேப்பர் பேடோடும் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்தாள்.

''எஸ் ஸார்.''

பிரபு தன் கொழுவிய கன்னத்தைச் சொறிந்து கொண்டே கேட்டார். ''மிஸ் கீதா யாமினியோட அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரை டைப் பண்ணிட்டீங்களா?''

''பண்ணிட்டிருக்கேன் ஸார்.''

''ப்ளீஸ் சீக்கிரமா டைப் பண்ணிக் கவர்ல போட்டுக் கொண்டாங்க. அவரோட ஃபாதர் வந்திருக்காங்க. ஆர்டரை அவர் கையிலேயே குடுத்துடலாம்.''

''எஸ் ஸார்.... ஆர்டர் வில் பி ரெடி வித்தின் ப்யூ மினிட்ஸ் ஸார்....'' கீதா தன் அகன்ற இடுப்பை அசைத்துக் கொண்டே நகர்ந்தாள். பிரபு பார்வையைத் திருஞானத்தின் பக்கமாய் நகர்த்தினார்.

''என்ன சாப்பிடறீங்க மிஸ்டர் திருஞானம்?''

சந்தோஷத்தில் வாயடைத்துப் போய், மலங்க மலங்க எல்லோரையும் விழித்து விழித்துப் பார்த்துக் கொண்டிருந்த திருஞானம் பிரபுவின் கேள்வியால் உசுப்பப்பட்டு நிமிர்ந்தார்.

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாங்க.''

''நோ.... நோ... ஹேவ் சம் டீ ஆர் காபி. மிஸ்டர் சந்திரபோஸ் கான்டீனுக்குப் போன் பண்ணிக் காபியோ டீயோ கொண்டு வரச் சொல்லுங்க.''

''எஸ் ஸார்.''

சந்திரபோஸ் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். ஹாலில் செண்ட்ரி ஆள் கையில் விசிட்டர்ஸ் புத்தகத்தோடு நின்றிருந்தான்.

சந்திரபோஸ் தாழ்ந்த குரலில் அவன் மேல் எரிந்து விழுந்தான். ''கேட்டுல நின்னுகிட்டு என்ன வேலை பார்க்கறீங்க... வெளியே



போகிறவங்களைக் கவனிச்சு எண்ட்ரி போட வேண்டாமா?''

''பார்த்துத்தான் ஸார் போட்டேன். அந்தப் பொண்ணு யாமினி நம்ம கம்பெனியிலிருந்து வெளியே போகவேயில்லை ஸார்.''

''இன்னொருவாட்டி சொல்லாதே.... எம்.டி.யோட காதுலே விழுந்தா அந்த நிமிஷமே உன்னோட சீட்டு கிழிஞ்சிடும். யாமினி மெயின் கேட் வழியா வெளியே போனதை நானும் எம்.டி.யும் ரவுண்ட்ஸ் வர்றப்ப பார்த்தோம்.''

செண்ட்ரி ஆள் முகம் வேர்த்திருந்தான். அவசர எச்சிலை விழுங்கிவிட்டு நாக்குழறினான். ''நா... நான் கவனிக்கலை ஸார்...''

''சரி சரி.... இப்போ டயம் போட்டியா?''

''போட்டுட்டேன் ஸார்.''

''என்ன டைம்?''.



ஆசிரியர்: உங்க பையனோட கையெழுத்தைப் பார்த்தால் பார்த்துக்கிட்டே இருக்கலாம்!

தந்தை: அட! அப்படி மணி மணியா எழுதுவானா?

ஆசிரியர்: பார்த்துக்கிட்டேயிருக்கலாம்னுதான் சொன்னேன். எழுத்துப் புரிஞ்சாத்தானே மேலே படிக்கிறதுக்கு?

—கிரிஜா மணாளன்.

---

''இந்த நிமிஷத்திலிருந்து அரைமணி நேரம் முன்னாடி போனதா போட்டிருக்கேன் ஸார்....'' சந்திரபோஸ் கையை நீட்ட, செண்ட்ரி ஆள் விசிட்டர்ஸ் புக்கைக் கொடுத்தான்.

''உனக்கு நாளைக்கு 'மெமோ வரும். ஃபைனைக் கட்டிட்டு ட்யூட்டியிலே ஜாய்ன் பண்ணு.... இனிமேலாவது கண்ணைத் தொறந்துகிட்டு வேலையைப் பாரு.''

''சரி ஸார்.''

''கான்டீன் பக்கமாத்தானே போறே? முருகன்கிட்டே சொல்லி மூணு காப்பி கொண்டுகிட்டு வரச் சொல்லு. சீக்கிரம்.''

அவன் தலையாட்டிக் கொண்டே நகர்ந்தான்.

சந்திரபோஸ் மறுபடியும் பிரபுவின் அறைக்குள் நுழைய பிரபு ஒநாய்த்தனமான பரிவோடு திருஞானத்தை விசாரித்துக் கொண்டிருந்தார்.

''யாமினி உங்களுக்கு ஒரேயொரு டாட்டர் தானா?''

''ஆமா.''

''குடும்பத்தை ரொம்பவும் சிக்கனப் படுத்திட்டீங்க.''

திருஞான்ம் ஒரு சின்னச் சிரிப்போடு, தலையைக் குனிந்து கொண்டு மேஜையின் ஓரத்தை வெட்கத்தோடு கீறினார். பிரபு சந்திரபோஸை ஏறிட்டார்.

''என்ன மிஸ்டர் சந்திரபோஸ்.... கையில விசிட்டர்ஸ் புக்கா?''

''ஆமா ஸார்....''

''மிஸ் யாமினி எத்தனை மணிக்கு வெளியே போயிருக்காங்க?''

சந்திரபோஸ் வெகு பவ்யமாய் விசிட்டர்ஸ் புக்கைப் பிரித்துப் பிரபுவின் முன்னால் பரப்பினான். பிரபு உன்னிப்பாய்ப் பார்த்துவிட்டுத் திருஞானத்தின் பக்கமாய் புக்கை நகர்த்தினார்.

''பாருங்க மிஸ்டர் திருஞானம். சரியா அரைமணி நேரத்துக்கு முன்னாடி உங்க டாட்டர் எங்க கம்பெனி காம்பௌண்ட் கேட்டைத் தாண்டியிருக்காங்க.''

பிரபு சொன்னதைக் கேட்டுத் திருஞானம் வெகுளித்தனமாய்ச் சிரித்தார். ''நானும் என்னோட டாட்டரும் பஸ்லே லேகிராஸ் ஆயிருப்போம் போலிருக்கு. இந்நேரம் அவ வீட்டுக்குப் போயிருப்பாள்.''

''சிட்டியிலே மழை ரொம்பவும் அதிகமா?''

''நோ.... நோ.... இதே மாதிரிதான் லேசா ட்ரிஸிலிங்....''

கண்ணாடிக் கதவு மறுபடியும் திறக்க, ''எக்ஸ்க்யூஸ்மி ஸார்'' என்று சொல்லிக் கொண்டே ஸ்டெனோ கீதா உள்ளே வந்தாள். டைப் அடித்த அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரை, கையெழுத்துக்காகப் பிரபுவின் முன்னால் வைத்தாள். பிரபு தன் வாயில் இருந்த பைப்பை எடுத்து மேஜையின் மேல் வைத்துவிட்டு பச்சை மசிப் பேனாவால் சுருக்கமாய்க் கையெழுத்துப் போட்டார்.

''கவர்ல போட்டு மிஸ்டர் திருஞானத்துகிட்டே குடுத்துடுங்க மிஸ் கீதா. பாஸ்தர் அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரோடு வீட்டுக்குப் போறா... யாமினிக்கு ப்ளஸண்ட் சர்ப்பரைஸா இருக்கும்.''

ஸ்டெனோ கீதா அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரைக் கவரில் போட்டுத் திருஞானத்திடம் நீட்ட அவர் அதை ஏதோ பிரசாதம் வாங்கிக் கொள்வதுபோல் வாங்கிக் கொண்டார்.

வெள்ளுடுப்பு அணிந்த அட்டெண்டர் ட்ரேயில் காப்பி கோப்பைகளை ஏந்திக் கொண்டு உள்ளே வந்தான். அவன் நீட்டிய காப்பியை உறிஞ்சிவிட்டு நெஞ்சு கொள்ளாத சந்தோஷத்தோடு எழுந்தார் திருஞானம்.

பாமரத்தனமாய் மூன்று பேர்க்கும் கும்பிடு போட்டார்.

''அப்ப நான் வர்றேங்க....''

''மிஸ் யாமினியை நாளைக்கே ட்யூட்டியில ஜாய்ன் பண்ணச் சொல்லுங்க. நல்ல நேரம் கெட்ட நேரம் பார்த்திட்டிருக்க வேண்டாம்.''

''நாளைக்கே அனுப்பிடறேங்க....''

கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார் திருஞானம். வானம் இன்னமும் நசநச வென்ற தூறலில் இருக்க, அந்தச் சாயந்தர நேரம் வெகுவாய் இருட்டியிருந்தது.

பிரபுவும் சந்திரபோஸும் கண்ணாடிக் கதவு வழியே, அவர் போவதையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, பரஸ்பரம் பெருமூச்சு விட்டார்கள்.

பிரபு தாழ்ந்த ஸ்தாயியில் கூப்பிட்டார்.

''சந்திரபோஸ்....''

''ஸார்.''

''யாமினியை உடனடியா இங்கிருந்து டிஸ்போஸ் பண்ணிடணும்.... யாருக்கும் எந்தச் சந்தேகமும் வரக்கூடாது....''

''வராது ஸார்.''

சந்திரபோஸின் உதட்டோரம் ஒரு சவப் புன்னகை நெளிந்தது.

(தொடரும்)

# அங்கு ரங்கூன் வீழ்ந்தது; இங்கு நம்பிக்கை துளிர்த்தது!

நான் சில ஆண்டுகளாகச் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன்.... இப்போதும் சொல்கிறேன். ஜவாஹர்லால்தான் என் வாரிசு, ராஜாஜி அல்ல....'' என்றார் காந்தி. ஆனால் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னர் 1927 இல் அவரே ஸி. ஆரைத் தமது வாரிசு என்று குறிப்பிட்டுப் பேசியதுண்டு. இப்போதோ சுதந்திர இயக்கத்தின் எதிர்காலத் தலைவர் நேருவே என்று வெளிப்படையாகத் தெரிவித்தார்.

மஹாத்மாவின் கொள்கை ஏற்புடையதல்ல என்று கூறியதன் பயனைத்தான் ஸி.ஆர். அனுபவித்துக் கொண்டிருந்தாரா? கடைசியில் நேருவும் ஸி.ஆரின் மாற்றுக் கருத்தையேதான் ஏற்றுக் கொண்டிருந்தார். ஆனால் ஒரு வித்தியாசம் இருந்தது. ஸி. ஆர். மஹாத்மாவிடமிருந்து தம் பாதை மாறுபடுவதை நேரடியாக உணர்த்தினார். நேருவோ, பாதை மாறிச் செல்ல மனம் வராமல் உணர்ச்சி வசப்பட்டுப் போனார். காந்தி கூறியதற்காகவே வேண்டா வெறுப்பாக ஸி. ஆரின் கருத்தை இறுதியில் ஏற்றார். 'காங்கிரஸ் காந்தியின் குழந்தை; எந்த சக்தியாலும் அந்த பந்தத்தைப் பிரிக்க முடியாது' என்று ஜவாஹர்லால் பேசியிருந்தது மஹாத்மாவை நெகிழச் செய்திருந்தது. 'நேருவுக்கு என்னிடம் உள்ள அன்பும் நம்பிக்கையும் அவர் என்னைக் குறித்துப் பேசும் ஒவ்வொரு வாக்கியத்திலும் வெளிப்படுகின்றன' என்றார் மஹாத்மா. ஸி. ஆருக்கு அன்பை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளும் குணம் இல்லாவிட்டாலும் நேருவின் அன்புக்குச் சற்றும் குறையாத அளவில் அவருக்கும் காந்தியிடம் ஆழ்ந்த பற்றுதல் உண்டு. இதை மஹாத்மாவும் நன்றாக அறிந்திருந்தார். எனவே காந்தி நேருவைத் தமது வாரிசாகத் தேர்ந்தெடுத்ததற்கு அவருடைய சொந்த விருப்பு வெறுப்புக்களே காரணம் என்று முடிவு கட்டுவது தவறாகும்.

உண்மை என்னவென்றால், நேரு ஸி. ஆரைக் காட்டிலும் மிகப் பிரபலமாக இருந்தார். அவர் முகத்திற்கும் ஆளுமைக்கும் மக்களைக் கவர்ந்திழுக்கும் சக்தி இருந்தன. குறிப்பாக அவர் இளைஞர்களையும் இடதுசாரியினரையும் ஈர்த்தது போல் ஸி. ஆரால் கவர முடியவில்லை. மேலும், பிரிட்டிஷாருடன் பேச்சு வார்த்தை நடத்துவதில் அர்த்தமில்லை என்ற நேருவின் கருத்து மக்களின் அப்போதைய மனநிலையுடன் ஒத்துப் போவதாக இருந்தது. ஸி. ஆரோ முயற்சிகளைக் கைவிடாமல் தொடர்ந்து பேச்சு வார்த்தைகள் நடத்தத் தயாராக இருந்தார். இக்கருணத்தில் ஸி.ஆர். கூறினார்: ''பண்டித நேரு பிரிட்டிஷாரிடம்

* கிரிப்ஸ் தூது — ராஜாஜியுடன் சந்திப்பு



நான் கொண்டுள்ளதைக் காட்டிலும் மிக அதிகமான அவநம்பிக்கை கொண்டிருக்கலாம்; ஆனால், இந்த ஆரம்ப கட்டத்தில் அவரைவிட அதிகமாகவே நான் பிரிட்டிஷாரை நம்புவேன்.'' மஹாத்மா பல ஆண்டுகளாகவே ஹிந்தி கற்றுக் கொள்ளுமாறு ஸி.ஆரை வற்புறுத்திவந்தார். ஆனால் ஸி.ஆர். அக்கோரிக்கையை நிறைவேற்றவில்லை. இதனால் பெருவாரியான இந்திய மக்களுக்கும் ஸி.ஆருக்கும் இடையே தொந்தம் ஏற்படவில்லை. தேசத்தை முழுதுமாக எடுத்துக் கொண்டு ஒட்டு மொத்தமாய்ப் பார்த்தால் ஸி.ஆரைக் காட்டிலும் நேருவுக்கே ஆதரவு அதிகமாய் இருக்கும் என்பதைக் காந்தி உணர்ந்திருந்தார்.

மஹாத்மாவின் அறிவிப்பு ஸி. ஆருக்கு ஏமாற்றமோ, வேதனையோ அளித்ததா என்று நமக்குத் தெரியாது. ஒருவேளை அளித்திருந்தால், அதை அவர் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. வார்தாவில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அவருடைய கருத்துக்கு அளித்த ஆதரவு காந்தியின் அறிவிப்பால் ஏற்பட்டிருக்கக்கூடிய காயத்தை ஆற்றியிருக்கலாம்.

அது எவ்வாறாயினும் ஜப்பானும் அதன் போர் வெற்றிகளுமே இப்போது ஸி.ஆரின் முழுக் கவனத்தையும் கவலையையும் ஈர்த்தன. ஹாங்காங், ஃபிலிப்பைன்ஸ், மலேயா ஆகிய நாடுகள் ஜப்பானிய படைகளுக்கு முன்பாக விழ்ந்தன. இந்தோ-சீனாவும் தாய்லாந்தும் ஜப்பானிய மேலாதிக்கத்தை ஏற்றன. நடக்கவே நடக்காது என்று கருதப்பட்டு வந்த நிகழ்ச்சி பிப்ரவரி 15ம் தேதி நடந்தது: பிரிட்டிஷாரின் 'கோட்டை'யாகிய சிங்கப்பூர் சரணடைந்தது. பர்மாவில் பிரிட்டிஷ் துருப்புக்கள் பின்வாங்கின. சீக்கிரமே இந்தியா ஜப்பானியரின் தாக்குதலுக்கு உள்ளாகும் என்றும் தோன்றியது. ஐரோப்பிய கௌரவத்திற்கு ஏற்பட்ட பங்கமும் ஓர் ஆசிய சக்தியான ஜப்பானின் வெற்றியும் பல இந்தியர்களை மகிழ்வித்தன. சுபாஷ் போஸைப் பின்பற்றியவர்களுக்கு ஜப்பானைப் பாராட்டுவது எளிதாக இருந்தது. ஆனால் மற்றவர்கள் ஜப்பானியரின் குரூரத்தைப் பற்றிக் கேள்விப்பட்டதும் அரண்டு போனார்கள். அந்தத் தேசத்தின் யுத்த வழிபாட்டுக் கொள்கை அவர்களுக்குக் கவலை அளித்தது.

ஜப்பானிய பிரவேசத்தால், இந்தியாவில், குறிப்பாகத் தென்னிந்தியாவில், எஜமானர் மாறுவதற்கான வாய்ப்புக்கள் அதிகரித்தன. ஜப்பானியரை எஜமானராக ஏற்கும் எண்ணத்தையே வெறுத்தார் ஸி. ஆர். ஜப்பானியரின் தாக்குதலைச் சந்திக்க நம்மைத் தயார் செய்து கொண்டு, அதே நேரத்தில் பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து சுதந்திரம் பெறவும் தொடர்ந்து போராடுவதே ஆண்மையான செயலாகப்பட்டது அவருக்கு. 1942 ஆம் ஆண்டின் முதல் மூன்று மாதங்களில் இந்தக் கருத்தை மக்களிடையே பரப்ப உத்வேகத்தோடு, இடைவிடாமல் முயன்றார் ஸி.ஆர்.

அவருடைய மேடைப்பேச்சுக்கள் எளிமையாகவும், நேரடியாகவும் அமைந்திருந்தன. மிகப் பயங்கரமான பிரச்னைக்கு அவர் கூறிய உபாயங்கள் சற்று அப்பாவித்தனமாகக்கூட இருந்திருக்கலாம். ஆனால் அவர் எவ்வித மனோதத்துவரீதியான விளைவுகளை உருவாக்க எண்ணினாரோ அதில் வெற்றி கண்டு வந்தார். பிரிட்டிஷ் அரசு அவருடைய பிரசாரத்தைப் பற்றி என்ன நினைத்தது என்பதை கவர்னர் ஹோப் வைஸ்ராய்க்கு எழுதிய சில வார்த்தைகள் உணர்த்துகின்றன:

''ராஜகோபாலாச்சாரி நிறையப் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறார். ஜப்பானியர்களால் இந்தியா அடையக் கூடிய நன்மை ஏதும் இல்லை என்று மக்களுக்கு உணர்த்தி வருவதன் மூலம் நன்மை செய்திருக்கிறார். இதே நேரத்தில் பிரிட்டனால் இனி ஜப்பானியத்தாக்குதலிலிருந்து இந்தியாவைக் காப்பாற்ற முடியாது என்றும் ஆனால் சுதந்திரம் அளிக்கப்பட்டால் ஓர் அற்புதம் நிகழ்ந்து, ஜப்பானியத் தாக்குதலிலிருந்து இந்தியா தன்னைத்தானே எப்படியோ காத்துக் கொண்டுவிடும் என்றும் பொருள் பட அவர் பேசி வருவது பெருந் தீங்கை விளைவித்துக் கொண்டிருக்கிறது."

பிப்ரவரி மத்தியில் ஜம்னாலால் பஜாஜ் காலமானார். 'என் துக்கத்தை வார்த்தைகளில்மூழ்கடிப்பதுஇயலாதகாரியம்' என்றார் ஸி. ஆர். ஏறத்தாழ இதே கால கட்டத்தில் ஜின்னா ஸி. ஆரின் குற்றச்சாட்டுக்களுக்குப் பதிலளித்தார். நடைமுறைக்கு ஒவ்வாத கொள்கையைப் பற்றிக் கொண்டிருப்பதாகத் தம் மீது குற்றம் சாட்டிய ஸி. ஆரிடமிருந்து ஒரு முடிவான, உறுதியான மாற்று யோசனையைத் தாம் வரவேற்பதாகக் கூறினார்:

''ராஜகோபாலாச்சாரி இரு சாராருக்கும் ஏற்புடைய ஓர் அடிப்படையை வடித்துக் காட்டட்டும். அதன் பிறகும் முஸ்லீம் லீக் ஒரு பிடிவாதக் கொள்கையைப் பற்றிக் கொண்டிருப்பதை அவர் காண்பாரேயானால் என் மீது குற்றம் சுமத்த அவர் தகுதிபெற்றவராவார்.

மார்ச் 8ம் தேதி ரங்கூனை ஜப்பான் கைப்பற்றியது. இந்தியப் பிரச்னைக்கு ஒரு தீர்வு காணும்படி இதுவரை சியாங்காய்ஷேக்கும் ரூஸ்வெல்ட்டும் வலியுறுத்திவந்ததை வெறுத்தும், புறக்கணித்தும் வந்தார் சர்ச்சில். ஆனால் ரங்கூனின் வீழ்ச்சி அவரை நிர்ப்பந்தப்படுத்தியது. ஸர் ஸ்டாஃபோர்ட் கிரிப்ஸ் பல புதிய திட்டங்களுடன் டெல்லிக்கு வருவார் என்று ரங்கூன் வீழ்ச்சிக்கு மூன்று நாட்களுக்குப் பிறகு அறிவித்தார் சர்ச்சில். நெடுங்காலமாக அணைந்து போயிருந்த நம்பிக்கைச் சுடர் மீண்டும் ஏற்றப்பட்டது. சிலர் மனங்களில் முணுக் முணுக்கென்று அச்சுடர் எரிந்தது. வேறு சிலர் மனங்களில் பிரகாசமாய் ஒளிர்ந்தது.

(தொடரும்)

தமிழாக்கம்: **சீதா ரவி**




# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம். பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர் நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு பொடுகு, மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல் குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும் விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 007**

எமது தைலம் கிடைக்குமிடங்கள் : 1. சேலம் — ரோசு மெடிக்கல்ஸ் 2. ஆத்தூர் — முத்து மெடிக்கல்ஸ் 3. நாமக்கல் — கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் — ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர் — ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ், 6. திருச்செங்கோடு — சீனிவாசா மெடிக்கல்ஸ், 7. தர்மபுரி — விஜயலஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி — கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ் 9. ஒசூர் — மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர் — பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள் 11, சென்னை-3 — ஹேமா மெடிக்கல்ஸ் 12. அமிஞ்சிகரை — வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம் — திருமகள் மெடிக்கல்ஸ் 14. காஞ்சிபுரம் — லஷ்மி மெடிக்கல்ஸ் 15. அரக்கோணம் — அகிலாம்பிகை மெடிக்கல்ஸ் 16. ஆரணி — பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை 17. திருவண்ணாமலை — அன்னை மெடிக்கல்ஸ் 18. வேலூர் (NA) — பாரத் மெடிக்கல்ஸ் 19. திருப்பத்தூர் (NA) — லஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம் — அன்பு மெடிக்கல்ஸ் 21. கள்ளக்குறிச்சி — A. ராஜீ நாட்டு மருந்துக்கடை 22. கும்பகோணம் — செல்வம் மெடிக்கல்ஸ் 23. தஞ்சாவூர் — சிட்டி மெடிக்கல்ஸ் 24. திருச்சி — சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் — தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம் — N. லஷ்மணன் மருந்துக்கடை 27. தேனி — ஆண்டாள் மெடிக்கல்ஸ் 28. மதுரை — குமார் மெடிக்கல்ஸ் 29. மதுரை — ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை) 30. ராமநாதபுரம் — பாத்மா மெடிக்கல்ஸ் 31. காரைக்குடி — மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ் 32. விருதுநகர் — S.S.K. மெடிக்கல்ஸ் 33. தூத்துக்குடி - அன்பு மெடிக்கல்ஸ் 34. திருநெல்வேலி — கோமதி மெடிக்கல்ஸ் 35. பாளையங் கோட்டை — ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ் 36. நாகர்கோவில் — S. நல்ல பெருமாள் மருந்துக்கடை 37. தென்காசி — M.R. மெடிக்கல்ஸ் 38. ராஜபாளையம் — அரவிந்த் மெடிக்கல்ஸ் 39. சிவகாசி — சிவகாசி மெடிக்கல்ஸ் 40. கோவில்பட்டி — சாந்தி மெடிக்கல்ஸ் 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் — பாலாஜி மெடிக்கல்ஸ் 42. உடுமலை — ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ் 43. பொள்ளாச்சி — ராமநாதன் மெடிக்கல்ஸ் 44. கோவை — காசிநாத் அண்ட் கோ., 45. கோவை — திருமலை மெடிக்கல்ஸ், காந்திபுரம் 46. திருப்பூர் — கீதா மெடிக்கல்ஸ் 47. சிவகங்கை குணா & கோ (கெமிஸ்ட்) 48. கோபி — வாணி பார்மஸி 49. ஈரோடு — ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிகல்ஸ் 50. திருச்சி ஜங் — கபூர் மெடிக்கல்ஸ் 51. புதுக்கோட்டை — மீனு பார்மஸி 52. திருவாரூர் — அன்னபூர்ணா மெடிக்கல்ஸ் 53. மாயவரம் — ஸ்வாமி மெடிக்கல்ஸ் 54. சிதம்பரம் — ராஜா பார்மஸி 55. விருத்தாசலம் — ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை — பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம் — மீனாக்ஷி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிக்கல்ஸ் 60. நாமக்கல் — சரஸ்வதி மெடிக்கல் ஹால். 61. காரைக்குடி — சரோஜா ட்ரக்ஸ் ஸ்டோர்ஸ். 62. பாண்டிச்சேரி — ராஜா மெடிக்கல்ஸ். 63 சென்னை-4 மீனாட்சி மெடிக்கல்ஸ் 64. மதுரை-1 ப்ரவீன் மெடிக்கல்ஸ் 65. நாகை-ரங்கா ஸ்டோர்ஸ் 66. மைலாப்பூர் R.R. பார்மஸி 67. தி. நகர் சுந்தரம் ஸ்டோர்ஸ் (கெமிஸ்ட்) 68. சேலம் — சாமுண்டி சூப்பர் மார்க்கெட் 69. கடலூர் — சிவா மெடிக்கல்ஸ் 70. வடபழனி — நீலகிரிஸ் டிரக் ஸ்டோர்ஸ் & பார்மஸி 71. தஞ்சாவூர்-1 சிங்காரம் மெடிக்கல்ஸ் மார்ட்

# இந்தியாவுக்கு டாலர்களை அள்ளித்தரும் ஆடைகள்!



பல்லாவரம் பாண்ட்ஸ் பவுடர் தொழிலகமும் அதற்கு எதிரே உள்ள ஒரு வாசனைப் பொருள்கள் உற்பத்தி நிறுவனமும் அந்த வட்டாரத்தில் தோல் பதனிடும் தொழிலகங்கள் வெளிப்படுத்தக் கூடிய நாற்றத்தைக் குறைக்க உதவுகின்றன. பிரதான சென்னை—திருச்சி சாலையிலிருந்து வலப்புறம் திரும்பிச் சென்றால் உயர உயரமான கோட்டை மதில் சுவர்களுடன் அந்த வட்டாரத்தில் ஏராளமான தோல் பதனிடும் தொழிலகங்கள் உள்ளன.

போகும்போதே, "ஸி. எல். ஆர். ஐ. என்று ஓர் அமைப்பு அடையாறில் உள்ளதே, அதன் பணி என்ன?" என்று கேட்டு வைத்தேன்.

நண்பர் சிரித்தார்: "உங்கள் கேள்விக்குப் பதில் கூற நான் ஒரு புத்தகமே எழுத வேண்டும். இரண்டு வரிகளில் சொல்வதென்றால், 'தோல் பாடம் செய்வதில் நவீன முறைகளைப் புகுத்துவதில் அதன் பணி கணிசமானது' எனலாம். சமீபத்தில் விமான விபத்தில் காலமானாரே நாயுடம்மா, அவர் அதன் தலைவராக இருந்த காலத்தில் இத்தொழிலுக்குப் புரிந்துள்ள சேவை கொஞ்ச நஞ்சமல்ல. இறக்குமதியாளர்கள் தோல் அப்படி இருக்க வேண்டும் இப்படி இருக்க வேண்டும் என்று நிபந்தனைகள் போட்டு விடுவார்கள். அவற்றை எப்படிப் பூர்த்தி செய்வது என்று அறிய நாங்கள் ஸி. எல். ஆர். ஐ.க்குச் செல்வோம். அவர்கள் இந்தியச் சீதோஷ்ண நிலைகளை மனத்தில் கொண்டு ஆய்வுகள் நடத்தி, எங்களுக்கு வழிகாட்டி உதவுவார்கள்."

## மூச்சு விடும் தோல்!

"இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் தோலில் என்னென்ன பொருள்களை அங்கே செய்கிறார்கள்?"

"அவர்களுடைய தலையிலிருந்து கால் வரை எல்லா உறுப்புக்களையும் மூடி மறைக்க நம்முடைய தோல்தான் பயனாகிறது. தொப்பி, ஜாக்கெட், டிரௌஸர்ஸ், கையுறைகள், காலணிகள் இத்தியாதி. நம் நாட்டில் காலுக்குச் செருப்பில்லாமல் நடப்பவர்கள் பல்லாயிரக்கணக்கில்! அங்கே ஒரு ஆளுக்குக் குறைந்தபட்சம் ஆறு வித ஷூ இருக்கும். உடைக்கு ஏற்ற ஷூ அணிய வேண்டும். நம்மிடமிருந்து காலணியின் மேல் பகுதியைத் தனியாகவும் கீழ்ப்பகுதியைத் தனியாகவும் ஆர்டர் கொடுத்து வாங்கிப் போவார்கள். இரண்டையும் இணைத்து "மேட் இன் ..." என்று அவர்கள் தேசத்தின் பெயரைப் போட்டு வியாபாரம் செய்வார்கள்! கையுறைகளில் இரண்டு வகை உண்டு. ஒன்று குளிருக்கு அடக்கமாக அணிவது. அது அன்றைய ஃபாஷனுக்கு ஏற்ப அமைவது. மற்றொன்று 'இண்டஸ்ட்ரியல் கிளவ்ஸ்.' மேல்நாட்டில் தொழிலகங்களில் பணியாற்றும் எந்தத் தொழிலாளியும் கையுறை இல்லாமல் வேலை செய்ய மாட்டான். இங்கே நமது தொழிலாளர் பலர் கையுறையைக் கண்ணால் கூடப் பார்த்திருக்க மாட்டார்கள். மேல்நாடுகளில் தொழிலாளர்களுக்குத் தேவையான கையுறைகளைச் செய்து அனுப்பினாலே போதும், மேலும் பல கோடிக் கணக்கில் நமது வியாபாரம் பெருகும்!"

"ஏன் இவற்றையெல்லாம் செயற்கைத் தோலில் செய்தளித்தால் என்ன?"

"அதில் அசௌகரியம் அதிகம். இயற்கைத்





* உருளும் பரம்களில் ரசாயனக் கலவையில், பதமான தோல்கள் ஊற வைக்கப்படுகின்றன.

* தோல்களில் மேடுகள் செதுக்கப்பட்டு ஒரே சீரான கனமுள்ளதாக மாற்ற ஓர் இயந்திரம்

தோல் 'மூச்சு விடும்!' அதாவது அதில் கண்ணுக்குப் புலனாகாத சிறிய துவாரங்கள் உண்டு. அதன் வழியாகக்காற்றுபோய்வரும். செயற்கைத் தோலில் இது கிடையாது. அதனால் அணிபவனுக்குக் கஷ்டமாக இருக்கும். ஆடை அணிவது சுகமாக இருக்க வேண்டாமா? பெரும்பாலும் செயற்கைத் தோல் சோபா நாற்காலிகளுக்குத்தான் பயன்படுகிறது."



**அயர வைக்கும் நவீன யந்திரங்கள்**

இதற்குள் நாங்கள் ஒரு தொழிலகத்தினுள்ளே நுழைந்திருந்தோம். ஒருமிகப்பெரிய பறவை தன் நீண்ட கழுத்தை நீட்டி நீட்டி அலகால் கொத்துவது போல், தனது கண்ணாடி உருளை மூக்கால் தோலைக் கொத்திக் கொத்திச் சூடேற்றிப் பளபளப்பும் ஊட்டிக் கொண்டிருந்தது ஓர் இயந்திரம்.

இன்னும் ஓர் இயந்திரத்தில் பிரும்மாண்டமான உருளைத் தொட்டிகள் பல அருகருகே சுழன்று கொண்டிருந்தன. தொட்டிக்குள் ரசாயனக் கலவையுடன் கலந்திருந்த தோலானது தொட்டி உருளும்போது உயரே ஏறிச் சென்று அங்கிருந்து 'தடக், தடக்'கென்று கீழே விழும்போது மிருதுத் தன்மை பெற்றது.

"இவையெல்லாம் பழங்கால இயந்திரங்கள். சில நவீன இயந்திரங்களைப் பாருங்கள்" என்று அதே தொழிலதிபரின் மற்றொரு தொழிற்கூடத்துக்கு அழைத்துப் போனார் நண்பர். அங்கு இதாலியிலிருந்து தருவிக்கப்பட்ட இயந்திரங்கள் ஆச்சரியமளிக்கும் விதமாக இயங்கிக் கொண்டிருந்தன. எந்த ஒரு மிருகத்தின் தோலையும் விரித்தால் அதன் எல்லைக்கோடு ஒரே சீராக இராது. கோணல்

மாணலாக இருக்கும். அதன் நீள அகலத்தைப் பெருக்கிப் பரப்பளவு இவ்வளவு என்று கூறிவிட முடியாது. எனவே அதன் மேல் பரப்பைச் சிறு சிறு சதுரங்களாக வரைபடம் செய்து, மொத்தம் இந்தனை சதுரங்கள், எனவே பரப்பளவு இவ்வளவு என்று கணக்கிடல்வேண்டும். இதனைத் நானியங்கு முறையில் கண்டுபிடித்துக் கணக்குப் போடும் இயந்திரம் ஒன்று உள்ளது. தவிர, மொத்தம் எத்தனை தோல் இந்த இயந்திரத்தின் எலக்ட்ரானிக் கண்களுக்கு அடியில் சென்றன; அவற்றின் மொத்தப் பரப்பளவு என்ன என்று உடனுக்குடன் கூட்டல் கணக்கும் போட்டுத் திரையில் காட்டுகிறது இந்த இயந்திரம்!

மற்றொரு இயந்திரம் தோலுக்கு ஸ்பிரே செய்து சாயம் ஏற்றுகிறது. ஆனால் இங்கும் தோலின் வடிவம் ஒரு பிரச்னை ஆகிறது. எல்லாப் பகுதிகளிலும் சாயம் ஏற வேண்டும்; ஆனால் சாயம் வீணாகவும் கூடாது. இதற்காக எலக்ட்ரானிக் கண்களுடன் ஐந்து கரங்கள் உயரே சுழன்று சுழன்று வருகின்றன. தோல் அதனடியில் பயணம் செய்யும் போது, தோல் எலக்ட்ரானிக் கண்ணில் படும் போது மட்டும் ஸ்பிரே இயந்திரம் சாயத்தைப் பீய்ச்சுகிறது. மற்ற சமயத்தில் இல்லை. இயந்திரத்தின் ஒரு பக்கத்தில் புகுந்து மறுபக்கம் தோல் வந்து சேர்வதற்குள் முழுதுமாகச் சாயம் ஏற்றப்பட்டுக் காய்ந்தும் விடுகிறது!

இன்னொரு இயந்திரம் தோலின் கனத்தை ஒரே சீராகச் செய்கிறது. ஆடுமாடுகளின் தோல், கழுத்து, முதுகெலும்பு பகுதிகளில் கனமாக இருக்கும். அதைச் சீவிச் சுரண்டி எடுத்து எல்லாப் பகுதியும் ஒரே கனமுள்ளதாகச் செய்கிறது இந்த இயந்திரம்.

"இப்படி சுரண்டி வழித்தெடுக்கப்பட்டு விட்ட தோல் சிதறல்கள் வீணாகின்றனவே?" என்றேன்.

"அதுதான் இல்லை. தோலில் மட்டும் ஒரு சிறு துணுக்குக் கூட வீணாகாது! இது போன்ற துருவல்களைக் கெட்டித்துப் பிளைவுட் போல போர்ட் ஆக்கிவிடுவார்கள். அதற்குப் பல வித உபயோகங்கள் உண்டு. நீள நீளமான துண்டுத் தோல்களைப் பின்னி, மணி பர்ஸ், ஹேண்ட் பேக் என்று தயாரித்து விடுவார்கள்!"

**ஒன்று ஆறாகிறது!**

இப்படிக் கூறியபடியே நண்பர் இன்னொரு இயந்திரத்தைச் சுட்டிக் காட்டினார். அதன் இயக்கம் என்னை அயர வைத்துவிட்டது! அது என்ன செய்கிறது தெரியுமா? எருமைத் தோல் போன்ற கனமான ஒரு தோலை, சீரான சம கனமுள்ள நான்கு தோல்களாகப் பிரித்து, உரித்து எடுத்து விடுகிறது! வெங்காயத் தோலை ஒன்றன்பின் ஒன்றாய் உரிப்பது போல!

"இதில் ஜப்பானியர்கள் நிபுணர்கள்" என்றார் நண்பர். "ஒரு தோலை ஆறு தோலாகக் கூடப் பிரித்து உரித்து விடுவார்கள்! ஆறு மடங்கு லாபம்!"

"இதுபோன்ற இயந்திரங்களையெல்லாம் தருவிக்க அரசு அனுமதி வழங்குகிறதா?"

"ஓ! தாராளமாக! தோல் ஏற்றுமதியில் அந்நியச் செலாவணி நிறையக் கிடைப்பதால் அதற்குத் தேவையான இயந்திரங்கள், ரசாயனப் பொருள்களை இறக்குமதி செய்ய அதிகமான சிரமம் இல்லை. சிக்கல் எல்லாம் கஸ்டம்ஸில்தான். 'இந்த இயந்திரத்தை இறக்குமதி செய்ய அனுமதி உண்டு' என்று நாங்கள் எங்களிடம் உள்ள புத்தகத்தைப் பிரித்துக் காட்டுவோம். அவர்கள் தங்களிடம் உள்ள புத்தகத்தைப் பிரித்துக் காட்டி 'அனுமதி இல்லை' என்று வாதாடுவார்கள். இப்படி அரசாங்கத்தின் கவனக் குறைவினால் ஏற்படும் சிக்கல்கள்தான் அதிகம்."

"அப்புறம் மாமூல் கொடுத்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்ள வேண்டுமாக்கும்!"

"மாமூலா? கோடிக் கணக்கில் பணம் புரளும் இந்தத் தொழிலில் மொமென்ட்தான்!"

காலநடை அபிவிருத்தி பற்றி நண்பர் வலியுறுத்தியது எவ்வளவு முக்கியம் என்பது எனக்கு அங்கே புரிய வந்தது. பல லட்சம் முதலீடு செய்து வந்துள்ள இயந்திரங்கள் போதிய வேலை கிடைக்காமல் ஓய்ந்து கிடந்தன. அவற்றின் செய்நேர்த்திக்கும் துரித இயக்கத்துக்கும் ஏற்பத் தீனி போட முடியவில்லை!

**அறியாமையால் ஏற்படும் நஷ்டம்!**

ஒருமுழுமைபெற்றுப்பூர்த்தியானதோலை எடுத்து அதில் ஓட்டை விழுந்திருப்பதைக் காட்டினார் நண்பர். "இதைப் பார்த்தீர்களா? சூடு போட்ட இடம் இது. இம்மாதிரி மக்களின் அறியாமையால்நம்நாட்டுக்கு ஏற்படும் நஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல. இந்தத் தோலை மேல் நாட்டினர் நிராகரித்து விடுவார்கள். இது மட்டுமா? ஆடு தின்னாப்பாலை என்று ஒரு வேலிச் செடி இருக்கிறது பாருங்கள்.

நண்பர்: டைரக்டர் சார்! நேற்று பார்த்த உங்க படம் என் வாழ்க்கைக்கே திருப்பு முனையா அமைஞ்சிடுச்சி!

டைரக்டர்: அப்படீங்களா?

நண்பர்: ஆமாம். இது மாதிரி உதவாத படங்களை இனிமே பார்க்கவே கூடாது என்று சபதம் எடுத்திட்டேன்...

—எம். இராதாகிருஷ்ணன்.



அதில் ஆடு உடலைக் கிறிக் கொள்ளும். அந்தத் தோலும் பாழ்தான்! இப்படிச் சில குறைபாடுகள் இருந்தாலும் இந்தச் சீதோஷ்ண நிலைதான் காரணமோ என்னவோ, இந்தியத் தோலின் தரம் உலகில் வேறு எந்தத் தோலுக்கும் இல்லை என்ற நன்மதிப்பைப் பெற்றிருக்கிறது. இந்தக் குறைகளையும் நீக்கிவிடலாம். இதற்குத்தான் நவீன கால்நடை அபிவிருத்தி முறைகள் அவசியமாகின்றன. ஆடுகளை ஒரே இடத்தில் வைத்திருந்து வளர்க்க வேண்டும். தீனி தேடி அலைய விடாமல் அதற்குத் தீனியைக் கொண்டு வந்து போடவேண்டும். கால்நடைச் செல்வம் நமது நாட்டில்தான் மிகவும் அதிகம். ஆனால் கால்நடை அபிவிருத்தி பற்றி அதிகமாக அக்கறை எடுத்துக் கொள்ளாத நாடும் நம்முடையதுதான்!''

## பூமியைப் பாழடிப்பதா?

இப்படி எத்தனையோ பல விஷயங்களைச் சுவையாகக் கூறிக்கொண்டு வந்த நண்பரைக் கேட்டேன்: ''தோல் பதனிடும் தொழிலில் வெளியேறும் அழுக்கு நீரால் சுற்றுச் சூழல் பாழாகிறதே. பல ஏக்கர் நிலங்கள் பயிர் வைக்கவே லாயக்கில்லாமல் போய் விடுகிறதே! மேலும் இருக்கிற சில மரம் செடிகளும் பட்டுப் போய் விடுகின்றனவே!''

''ஆமாம், ஸார், ஆமாம்,'' என்று ஒப்புக் கொண்டார் நண்பர். ''உப்பு நீரும் சுண்ணாம்பு நீரும் வெளியேறி ஆம்பூர் பகுதிகளில் நிலங்களைப் பாழடித்துள்ளன. பாலாற்றின் படுகை நீரைக் கூடக் குட்டிச்சுவராக்கியுள்ளன. இதைப் பற்றி ரொம்ப காலமாக இந்தத் தொழிலில் இருப்பவர்கள் அக்கறை காட்டவே இல்லை. இது மிகப் பெரிய குற்றம்தான். ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால் இப்போது நிலைமை மாறி வருகிறது. சில தனியார் நிறுவனங்கள் இந்தத் தொழிலகங்கள் வெளியேற்றும் நீரைச் சுத்தப்படுத்த முடியும் என்று சில உபாயங்களைக் கண்டுபிடித்து உபகரணங்களையும் தயாரித்து வருகின்றன. ஆனால் முழு திருப்தி ஏற்படவில்லை. முயற்சி தொடர்கிறது.''

''ஏன், இந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களே ஒன்றிணைந்து ஆய்வுகள் நடக்க வழி வகுக்கக் கூடாதா?''

''செய்திருக்கலாம், தடையாக இருந்து வந்தது பச்சையாகக் கூறுவதென்றால் ஒன்று, சுயநலம், இரண்டு, அறியாமை. ஒரு தொழிலதிபர் என்ன சொன்னார் தெரியுமா? 'தோல் பதனிடும் தொழிலே சுற்றுப்புறத் தூய்மை காக்கும் தொழில்தானே! இந்தத் தொழில் இல்லை என்றால் இத்தனை தோலும் சாலையோரங்களில் குவியத்தானே செய்யும்?' என்று கேட்டார்!''

''அழகுதான் போங்கள். கேட்டுச் சிரிப்பதா, ஆத்திரமடைவதா என்று புரியாத பேச்சாயிருக்கிறதே! தோலைப் பூமியில் இட்டால் அது ஜீரணிக்கப்பட்டு மண்ணோடு மண்ணாகிவிடும். ஆனால் சுண்ணாம்பு மற்றும் உப்பு நீரால் பூமி பாழாகிறதல்லவா?''

''சரியான வார்த்தை. பூமியை இறைவன் நமக்குத் தந்தவிதமாகவே பார்துகாத்து அடுத்த தலைமுறையினரிடம் ஒப்படைக்க வேண்டியது நம் கடமை. ஆனால் பூனைக்கு யார் மணி கட்டுவது என்பதே பிரச்னை! 'எஸ். டி. ஸி. தான் நம்மிடமிருந்து ஒரு சதம் கமிஷன் அடிக்கிறதே. அது கொடுக்கட்டுமே இந்த ஆய்வுகளுக்கான பணம்' என்று சிலர் கூறிக் கொண்டிருக்கிறார்கள்! என்றாலும் ஒரேயடியாக நாம் மனம் தளர்ந்து போய் விடவும் வேண்டாம். இதுபற்றி இப்போது கருத்தரங்குகள் நடக்கின்றன; ஆய்வுகள் ஆரம்பமாகியுள்ளன; கடுமையான சட்டங்களும் வந்திருக்கின்றன.''

''அரசின் கட்டுப்பாடுகளிலிருந்து தப்புவது பெரிய காரியமா? வைட்டமின் 'ப்'வை வைத்து அழுத்தினால் தீர்ந்தது!''

''அது பல இடங்களில் நடக்கவும் செய்கிறது, உண்மைதான். ஆனால் பொதுவாக இந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களிடமே ஒரு மனமாற்றமும் விழிப்புணர்ச்சியும் ஏற்பட்டு வருகிறதே. அதுதான் முக்கியம்; பெரிய முன்னேற்றமும் அதுதான்.''

எது காரணம்?

வாண்டட் கால
வரம்புக்குள்
சுற்றிக் கொண்டிருந்த
வெள்ளாடு
வேலி தாண்டி
மேட்ரிமோனியலில் மேய்கிறது!
வயசுதான் காரணம்
வயசுதான் காரணம்!

## எத்தனை சைபர்?

இத்தனை விஷயங்களை அளந்துக் கொள்ளாமல், சலிப்பின்றிக் கூறிவந்த அந்த நண்பரைப் பற்றியும் எழுத எனக்கு ஆசைதான். ஆனால் அவரோ, ''இந்தத் தொழில் — வர்த்தகத்தைப் பற்றி எழுதுங்கள்; என்னைப் பற்றி எதுவும் வேண்டாம்'' என்று தடை விதித்து விட்டார்.

ஒன்று மட்டும் ரகசியமாகச் சொல்லி வைக்கிறேன்: எனது அந்த நண்பர் கையில் வாங்கிய மாதாந்திர சம்பளமான முந்நூறு ரூபாயில் இருநூறு ரூபாய்களைத் தாயாரிடம் கொடுத்துவிட்டு அவருடைய ஆசி பெற்று, பாக்கி நூறு ரூபாயுடன் தோல் வர்த்தகத்தில் இறங்கியவர். இன்று அந்த 100க்குப் பக்கத்தில் மேலும் எத்தனை சைபர்களைச் சேர்த்துக் கொண்டிருக்கிறார் என்பது அவருக்குத்தான் தெரியும். என்னுடைய கணிப்பு நாலுக்குக் குறையாது என்பதுதான்! தலை வணங்கச் செய்கிற ஆற்றல், அது.

— கி. ராஜேந்திரன்.

திரைவிழாப் படக்கதை — 3



# ஒரு மனைவி

சூரியன் எரித்துக் கொண்டிருந்தான்.

அவர்கள் அதை லட்சியம் செய்யாமல் மேலே மேலே மண்ணைத் தோண்டினார்கள். அவர்களுடைய பரந்த தோள்களில் வியர்வைக் கொப்புளங்கள்.

'ஹக்' என்று மண்வெட்டியைத் தூக்கிப் போட்டான் ரிச்சர்ட்.

பக்கத்தில், மண் குவியலில் இருந்த வாட்டர் பேக்கை எடுத்தான். தண்ணீரைத் தலையில் ஊற்றிக் கொண்டான். முகத்தில் அறைந்து கொண்டான். கொஞ்சம் குடித்தான். அப்படியே அந்த மண் குவியல் மீது மல்லாந்தான். கண்களைச் சுருக்கிக் கொண்டு சூரியனைப் பார்த்தான்.

கார்ல் மூச்சிரைத்தான். அவனும் மண்வெட்டியை வீசி எறிந்துவிட்டுத் தண்ணீரை மேலே சரித்துக் கொண்டான். ரிச்சர்டுக்கு அருகில் மல்லாந்தான்.

"கார்ல்....." என்றான் ஏக்கத்துடன்.

"என்ன ரிச்சர்ட்?"

"நான் எப்போது விடுதலையாகி எப்போது வீட்டுக்குப் போகப் போகிறேன்?" என்று லட்சத்து ஒன்றாவது முறையாகக் கேட்டான்.

"வீட்டுக்குப் போய் என்ன செய்யப் போகிறாய் ரிச்சர்ட்?"

"அங்கே என் அன்னா காத்திருக்கிறாள். அவள் கண்கள், அவளுடைய ஈரமான உதடுகள்.... அன்னாவிற்கு விலாவில் ஒரு மச்சம் இருக்கிறது பார்...."

"பச்.... எத்தனை தடவை சொல்லியிருக்கிறாய். உனக்கு அலுக்கவில்லை? தினம் அவளுடன் எப்படி வாழ்க்கை நடத்தினாய், எப்படிச் சாப்பிட்டாய், எப்படி உறங்கினாய்.... கேட்டுக் கேட்டு எனக்கு அலுத்துவிட்டது ரிச்சர்ட்...."

"நீ அனுபவித்துப் பார்க்காதவன். அலுப்பாகத்தான் இருக்கும். ஆனால் எனக்கு.... எனக்கு....?"

"பெண்ணின் பாவாடைக்குக் கீழே வாழும் வாழ்க்கை, ஒரு வாழ்க்கையா ரிச்சர்ட்."

இரவு.

சிறைமுகாமில் இருவரும் படுத்துக்கிடந்தார்கள்.

கார்ல் யோசனையில் இருந்தான்.

என்னதான் ரிச்சர்டைக் கேலி செய்தாலும்கூட, அவனுடைய அன்னாவைப் பற்றி ரிச்சர்ட் கூறியதெல்லாம் கார்லின் மனத்தில் இடைவிடாமல் வட்டம் போடும் கழுகுகள் போல வட்டமிட்டுக் கொண்டேயிருந்தன.

ஒரு குடும்பவாழ்க்கையில் இத்தனை சுவாரஸ்யமா?

ரிச்சர்டின் மனைவி அன்னா அத்தனை அழகியா?

அவளுடைய மனது நிஜமாகவே பூவைவிட மென்மையானதா?

இந்த கார்ல் ஓர் அனாதை. இவனுக்கு என்று தனியாக ஒரு குடும்ப வாழ்க்கை இனி அமையப் போவதில்லை.

யோசிக்க, யோசிக்க, யோசிக்க...



அன்னாவின் மீது அவனுக்கு அபரிமிதமான காதல் ஏற்பட்டது.

அவளுடன் ஒரு நாள் வாழ்க்கையாவது வாழ்ந்துவிட வேண்டும்.

சிறை முகாமிலிருந்து தப்பித்துவிட வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான்.

தப்பித்தான்.

வெளியே கதவு தட்டப்பட்டது.

அன்னா வியந்து போனாள்.

'இந்த நேரத்தில் யார் என்னைத் தேடிக் கொண்டு?'

கதவைத் திறந்தாள்.

"யாரது?" என்றாள்.

அந்தக் குரல்!

வெண்கல மணிகளை, வெள்ளிப் பாத்திரத்தில் உலவவிட்டதுபோல் வந்த அந்தக் குரல்!

அந்தக் குரலைக் கேட்டு கார்ல் அசந்தான். நிஜமாகவே ரிச்சர்ட் கொடுத்து வைத்தவன் தான்.

"என்னைத் தெரியவில்லை? உன் ரிச்சர்ட் வந்திருக்கிறேன் அன்னா!" என்றான் கார்ல்.

அன்னா மூச்சை இழுத்துப் பிடித்தாள்.

கார்ல் உள்ளே வந்ததும், கதவை அடைத்தான்.



கார்ல் சுவாதீனமாக உள்ளே நுழைந்து தொப்பியைக் கழற்றி வைத்தான்; ஓவர் கோட்டை ஹாங்கரில் மாட்டினான்.

அன்னா அவனை ம்யூஸியத்துப் பொருள் போல் பார்த்தாள்.

"யார் நீ?"

"உன் ரிச்சர்ட், அன்னா!" என்றான் கார்ல்.

அன்னாவின் கண்களில் ஊசி முனை அளவு கூட நம்பிக்கை ஏற்படவில்லை.

"கான் ஸ்டவ் ரிப்பேர், ரிப்பேர் என்று சொல்லிக் கொண்டிருந்தாயே.... சரியாகி விட்டதா அன்னா?"

"ம்" என்றாள் அன்னா.

"எனக்கு ஒரே பசி" என்றான் கார்ல்.

"ரிச்சர்ட் இறந்துவிட்டார் என்று எனக்கு மிலிட்டிரியிலிருந்து தகவல் வந்தது."

"ச்சே. நான் சிறைப் பிடிக்கப்பட்டேன் அன்னா. உனக்குத் தவறுதலாகச் செய்தி வந்திருக்கிறது. இப்போது நான் தப்பித்து வந்து விட்டேன். பசிக்கிறது என்றேனே...."

அன்னா மறுபேச்சுப் பேசாமல் ஸ்டவ் ஏற்றி, டீ கெட்டிலை அதன் மீது வைத்தாள். கார்லின் பார்வை அன்னாவையே சுற்றிச் சுற்றி வந்தது. அவளுடைய குறுகுறு விழிகள், அவளுடைய மெல்லிய கால்கள், துடித்த உதடுகள்.

கார்ல் அமர்ந்திருந்த நாற்காலிக்குப் பக்கத்தில் வந்தாள். டோஸ்ட் செய்த இரண்டு ரொட்டித் துண்டங்களை வைத்தாள்.

"சாப்பிடுங்கள்" என்றாள்.

"என்னுடைய ஸ்பெஷல் முள் கரண்டி இருக்கிறதே, மூன்று முனையுடன்.... அதை எடு அன்னா" — அன்னா மெல்லிய வியப்புடன் எடுத்துத் தந்தாள்.

கார்ல் அதை வாங்கி, ரிச்சர்ட் போலவே ரொட்டியை நறுக்கினான். சாப்பிட்டான். டீ குடித்தான். எழுந்து கொண்டான்.

"நீங்கள் என்னதான் ரிச்சர்ட் போலவே செய்து காட்டினாலும், நீங்கள் ரிச்சர்ட் இல்லை என்று எனக்குத் தெரியும். நாளைக்குக் காலையில் நான் சீக்கிரம் வேலைக்குப் போய்விடுவேன். நான் திரும்பி வருவதற்குள் நீங்கள் போய்விடுங்கள்" என்றாள் அன்னா.

கார்ல் அவளையே பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

மறுநாள் காலை கார்ல் எழுந்தபோது அன்னாவைக் காணவில்லை. ஷேவ் செய்து, குளித்து, உடை மாற்றி வெளியே வந்தான். இலக்கில்லாமல் ஊரைச் சுற்றி வந்தான். மாலையில் வீட்டுக்கு வரும்போது விளக்குகள் ஒளிரத் தொடங்கிவிட்டன.

கதவைத் தட்டினான்.

"யாரது?" என்று அன்னாவின் குரல் கேட்டது.

# — ஓர் அந்நியன்!



''நான்தான் ரிச்சர்ட்'' என்றான் கார்ல்.
அன்னா கதவைத் திறந்தாள்.
''உனக்காக நான் ஒரு பொருள் எடுத்து வந்திருக்கிறேன்'' என்றான் கார்ல்.
''என்ன அது?'' என்றாள் அன்னா அசுவாரசியமாக.
''இதோ பார்....'' என்று பார்சலைப் பிரித்தான் கார்ல்.
அது ஒரு கடிகாரம். மணி அடிக்கும்போது நாட்டியமாடும் இரண்டு பொம்மைகள்.
அன்னாவின் கண்கள் வியப்பால் பெரிதாயின.
''இதை நீ நீண்ட நாட்களாகக் கேட்டுக் கொண்டிருந்தாயே அன்னா'' என்றான் கார்ல்.
''நிறைய விலை ஆயிற்றே இது?''
''என் அன்னாவிற்கு இதற்கு மேலும் கொடுக்கலாம்'' என்றான் கார்ல்.
அன்னா மௌனமாய் இருந்தாள்.
கார்ல் அவளது கையைப் பற்றி அவளைத் தன்னருகே இழுத்தான்.
''நாளை முதல் நீ வேலைக்குப் போக வேண்டாம் அன்னா.... நானே போகிறேன். நம் இருவருக்கும் போதுமானதை நானே சம்பாதித்து வருகிறேன்'' என்றான் கார்ல்.

மறுநாள்.
கார்ல் வேலைக்குப் போய்விட்டான்.
அன்னா வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருந்தாள்.
''அன்னா.... அன்னா....'' என்று பக்கத்து வீட்டு மேரியின் குரல் கேட்டது.
''வா.... மேரி'' என்றாள்.
''உன் வீட்டில் புதிதாய் ஒரு விருந்தாளியைப் பார்க்கிறேனே யாரது?'' என்று கேட்டாள்.,
''ரிச்சர்ட்.'' என்றாள் அன்னா.
''ரிச்சர்ட் போர்முனையில் இறந்துவிட்டதாக....
''அது பொய் மேரி. சரியாகச் சரி பார்க்காமல் கொடுக்கப்பட்ட தகவல்.''
''ம்ஹ்ம்.... போர்க் குழிகளில் எதிரிகளை வேட்டையாடப் பதுங்கி இருக்கும் ஆண்கள்... வெற்றுச் சமையல் அறையில் தனிமைப் படுத்தப்பட்ட பெண்கள்..... இந்தப் பெண்கள் எவ்வளவு நாட்களாய்க் காத்திருக்கிறார்கள்.... இந்தக் காத்திருத்தலுக்கு முன்னால் மரணம்கூட சக்தியற்றுப் போய்விடுகிறது அன்னா.... உன் காத்திருத்தல் முடிந்துவிட்டது. சந்தோஷந்தான்....''
அன்னா பாய்ந்து மேரியைக் கட்டிப் பிடித்து ஒரு முத்தம் கொடுத்தாள்.

இரவு படுக்கையில் கார்ல் புரண்டு கொண்டிருந்தான்.
வேலைகளை முடித்துவிட்டு அன்னா அவனருகில் வந்தாள்.
''எனக்கு ஒரு குழந்தை வேண்டும் ரிச்சர்ட்'' என்றாள் அன்னா.

குளிர்காலம் பனியுடன் வந்தது. சென்றது. மரங்களில் இலைகள் உதிர்ந்தன. துளிர்கள் தளிர்த்தன.
கார்ல் அன்னாவின் வயிற்றில் காதை வைத்துக் கேட்டான்.
''இங்கே யாரோ தட்டுகிறார்கள் அன்னா.''
அன்னா கலகலவென்று சிரித்தாள்.
''உன் இதயமும் என் இதயமும் சேர்ந்து உருவாக்கிய மொழிதான் அங்கே கேட்கிறது ரிச்சர்ட்'' என்றாள் அன்னா.
வெளியில் சங்கொலி கேட்டது.
போர் நிறுத்தச் சங்கொலி.
அன்னாவின் உடல் லேசாக நடுங்கியது.
அன்றைக்குத் தபாலில் அன்னாவிற்கு அந்தக் கடிதம் வந்து சேர்ந்தது.

---



படவிழா தொடங்கி ஒரு வாரம் கழித்துத்தான் பாக்யராஜ் வந்தார்! ராமகிருஷ்ணா இவேட்டர் காம்பவுண்டில் சகஜமாக உலா வந்தார். மெட்ராஸில் இப்படி ஃப்ரீயாக இருக்க முடியுமா என்ன?

வந்த இரண்டாம் நாள் ஆந்திரப் பத்திரிகையாளர்களையெல்லாம் கூட்டினார். 'இன்றைக்கு நான் உங்களைக் கேள்வி கேட்கப் போகிறேன். நீங்கள் எனக்குப் பதில் அளிக்கப் போகிறீர்கள்' என்று பேட்டியை வித்தியாசப்படுத்தினார்.

''நல்ல சினிமா என்றால் என்ன? சீரியஸ் சினிமா என்றால் என்ன?''

பலபேர் பலவிதமாக விளக்கம் கொடுக்க —

''சினிமா என்பது ஒரு விஷுவல் மீடியம். டயலாக்கே இருக்கக் கூடாது'' என்று ஒருவர் சொல்ல —

பாக்யராஜ் என்ன சொன்னார் என்றால்:

''டயலாக் வேணும்னா வேணும். வேணாம்னா வேணாம். எனக்குக் கதை சொல்ற முறைதாங்க முக்கியம்.''

Class of 1984 என்ற வன்முறைச் சம்பவங்கள் நிறைந்த படத்தைப் பற்றி வெகுவாக பேச்சு அடிபட்டது. ஆசிரியர், மாணவர் போராட்டம் பற்றிய படம்.

அந்தப் படத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''எங்கயாவது நடக்கக்கூடிய ஒரு மேட்டரை நாம சினிமாங்கற பவர்ஃபுல் மீடியத்தில காட்டினா, அது மத்தவங்களை தப்புப் பண்ணத் தூண்டி விடாதா... ஒரு சொஸைட்டியில எல்லாமே தப்புப் பண்றாங்கன்னா, அந்தச் சமூகத்தில ஒரு புரட்சி உண்டாக்க அந்த மாதிரிப் படங்களை எடுக்கலாம். அதைவிட்டுப்போட்டு, எங்கேயோ நடக்கிற சின்னச் சின்னத் தப்பையெல்லாம் பெரிசு பண்ணிக் காட்றது தப்பு'' என்றார் பாக்யராஜ்.



ஒருவர்: "அந்த பஸ் டிரைவர் முன்பெல்லாம், இந்த ஊர்ல ஒரு குறிப்பிட்ட இடத்திலே இறங்கி 'டீ' குடிச்சிட்டுத்தான் வண்டியை எடுப்பார். ஆனா இப்பவெல்லாம் இறங்கிச் சாராயம் குடிக்கிறார்."

மற்றவர்: "ஏன் இப்படித் திமிர்நு கெட்டுப் போயிட்டார்?"

முதலாமவர்: "அவர் என்ன பண்ணுவார்... முன்பு டீக் கடை இருந்த இடத்தில் இப்ப சாராயக்கடைதானே இருக்குது...?"

— இரா. சம்பத்குமார்.

அன்பே அன்னா,

நான் நிறைய இன்னல்களை அனுபவித்துவிட்டேன். போரின் கொடுமைகளைச் சந்தித்துவிட்டேன். உன் முகம் கண்டு அவற்றை மறக்கப் பிரியப்படுகிறேன். உன் மார்பில் முகம் புதைத்து என் நினைவுகளைப் புதுப்பித்துக் கொள்ளப் போகிறேன். வருகிறேன். காத்திரு.

ஒரு கோடையில் வாடும்,
ரிச்சர்ட்.

அன்னாவிற்குத் தலைசுற்றியது.

அன்றைக்கு மாலை ரிச்சர்ட் வாசலில் நின்று கதவைத் தட்டினான்.

அன்னா கதவைத் திறந்தாள்.

உள்ளே வந்தவுடன் ரிச்சர்ட் அவளைக் கட்டிப் பிடித்தான். போர்க் காலக் கதைகள் சொன்னான். ரொட்டியைத் துண்டாக்கி உண்டான். அன்னாவிற்கு அவன் சாப்பிடுவது கார்ல் சாப்பிடுவதுபோல் இருந்தது.

ஷேவ் செய்தான். மேலே போட்டிருந்த ஓவர் கோட்டைக் கழற்றி கணப்பில் போட்டான். "இனி அது எதற்கு அன்னா?" என்றான். உற்சாகமாக இருந்தான்.

அப்போதுதான் கார்ல் உள்ளே வந்தான்.

கார்லைக் கண்டவுடன் ரிச்சர்டிற்கு ஆச்சரியம். சந்தோஷம். பரபரப்பு. எல்லாமே!

"கார்ல்..... எப்படி என் வீடு தெரிந்தது உனக்கு....? வா.... வா..... இவள்தான் அன்னா. நான் உன்னிடம் அடிக்கடி சொல்வேனே, அவள்தான் இது. அன்னா இது கார்ல். என்னுடன் சிறைக் காம்ப்பில் இருந்தவன். தப்பித்துப் போனவன்....." என்று நிறையச் சொன்னான் ரிச்சர்ட்.

கணப்பிற்காகக் கரி கொண்டு வந்திருந்தான் கார்ல். அதைக் கணப்பில் போட்டான்.

அன்னா சுவாதீனமாக கார்லை நெருங்கினாள். அவனை லேசாக அணைத்துக் கொண்டு நின்றாள்.

ரிச்சர்ட் முகத்தில் குழப்பத்துடன் அவர்களைப் பார்த்தான்.

"என்னை மன்னித்துவிடு ரிச்சர்ட்.... கார்ல் தான் என் கணவன்" என்றாள் அன்னா.

"என்ன?" என்று அதிர்ந்து போனான் ரிச்சர்ட்.

"ஆம்" என்றான் கார்ல் லேசான பயத்துடன்.

"சிநேகிதத் துரோகி" என்று பல்லைக் கடித்தான் ரிச்சர்ட். கீழே இருந்து ஒரு கோடாலியை ஆவேசமாகப் பொறுக்கினான்.

கார்ல் தற்காப்பிற்காக ஒரு கத்தியைக் கையில் ஏந்திக் கொண்டான்.

ரிச்சர்ட் முன்னால் பாய, அன்னா அதீதமாக அலற.... ரிச்சர்ட் நின்றான். கோடாலியைக் கீழே வீசினான்.

"அப்படியானால் இந்த வீட்டில் நான் யார்.... யார்....?"

"ஹலோ...." என்று பக்கத்து வீட்டு மேரி உள்ளே நுழைந்தாள்.

சூழ்நிலை தெரியாமல் கார்லைப் பார்த்து புன்னகைத்தாள். அன்னாவைப் பார்த்து புன்னகைத்தாள். ரிச்சர்டைப் பார்த்தாள்.

"யார் இந்தப் புது ஆசாமி.... அந்நியன்?" என்று கேட்டாள்.

ரிச்சர்டுக்குத் தலையில் அடித்தது போலிருந்தது அந்த வாக்கியம்.

"ஆம். நான் அன்னியன்தான்" என்று முணுமுணுத்தான் ரிச்சர்ட். யோசித்தான். 'தனியாகத் தவித்துக் கொண்டிருந்த என் அன்னாவிற்கு ஆதரவு அளித்தவன் கார்ல். அவளுக்காகச் சிறையிலிருந்து தப்பி வரத் துணிந்தவன். அவளுக்காக ஆபத்தைச் சந்திக்கத் தயாரானவன். அவளை அடையப் பாடுபட்டவன். அவள் சரி என்று கூறப் பொறுமையுடன் காத்திருந்தவன். எனக்கில்லாத தைரியம் அவனுக்குத்தானே இருந்தது? என்னைவிட அவனுக்குத்தான் அன்னாவின் மீது உரிமை அதிகம்!'

ரிச்சர்டை அந்த வீட்டிலேயே இருக்கச் சொல்லிவிட்டு கார்லும் அன்னாவும் சேர்ந்து இன்னொரு புது வீடு, இன்னொரு புது வாழ்க்கை என்ற தீர்மானத்துடன் வெளியேறினார்கள்.

**The Woman and the Stranger** என்ற இந்த ஜெர்மன் மொழிப் படத்தில் மூன்றே பாத்திரங்கள்தான். மற்ற பாத்திரங்கள் எல்லாம் ஃப்ரேமில் நுழைந்து வெளியேறுகிறார்கள் என்று சொல்லலாம். முதலில் கார்ல் அன்னியன் என்று தெரிந்து அவன் உறவை மறுத்தாலுங்கூட, பின்னர் மெதுமெதுவாக கார்லிற்கும் அன்னாவிற்கும் இடையில் காதல் மலர்வதைப்படிப்படியாக, மிகநேர்த்தியாகச் சொல்லியிருக்கிறார் டைரக்டர். இதில், ஸஸ்பென்ஸ் என்று ஒன்றுமில்லாவிட்டாலுங்கூட, 'தியேட்டரில் ஊசியைக் கீழே நழுவவிட்டால்கூட கேட்கும்' அமைதியுடன் அத்தனை பேரும் பார்த்தார்கள். கடைசிக் காட்சிகளில் நாற்காலி முனைக்கே ஆடியன்ஸ் அனைவரும் வந்துவிட்டார்கள். ஒரு குடும்பக் கதையில் இத்தனை த்ரில்லைக் கொண்டு வந்த விதத்தில் டைரக்டர் ரெய்னர் ஸைமனுக்கு வெற்றிதான்.

— ஜெயமன்மகன்



# தொழில் துறையில் தமிழகத்தை மத்திய அரசு புறக்கணிக்கிறதா?

## —மத்திய அமைச்சர் அருணாசலம் பேட்டி

புது தில்லி. ஒரு ஞாயிற்றுக்கிழமை. காலை பதினொரு மணிக்கு உத்யோக்பவனை நெருங்கியபோது கேள்விப்பட்டது: 'அருணாசலம் படு பிஸியாக காரியாலயத்தில் அமர்ந்து ஃபைல் பார்த்துக் கொண்டிருக்கிறார்!'

என்னதான் தொழில் அபிவிருத்திக்கு (ராஜ்ய) மந்திரியானாலும் இப்படி ஞாயிற்றுக்கிழமைகளில்கூட வேலை செய்தால் அப்புறம் தொழில் வளர்ச்சி வேகம் கட்டிப் பிடிக்க முடியாத அளவுக்குப்போய்விடப்போகிறதே என்ற கவலை எழ, அவரைத் தொந்தரவு பண்ணியே தீருவது என்று தீர்மானித்தேன்.

எட்டிப் பார்த்தபோது, ''வாங்க, வணக்கம்!'' என்றார்.

''என்ன இப்படி ஞாயிற்றுக்கிழமையில் கூட.....?''

''அதுவா, நாளைக்கு மக்கள் சபை—ராஜ்ய சபையில் எழப்போகிற கேள்விகளுக்குப் பதில்களைத் தயாராக வைத்திருக்க வேண்டாமா? அதற்காகத்தான்.....'' என்றார்.

''அப்படியானால் என் கேள்விகளுக்கும் சேர்த்தே பதில் கூறி விடுங்களேன்....''

''பேட்டியா? சரி கேளுங்கள்!'' என்று ஃபைல்களை ஒதுக்கினார்.

''புதிய மந்திரி சபை இளமைத் துடிப்புடன் பலப்பல புதுமுகங்களைக் கொண்டதாக இருக்கிறது. தொழிலபிவிருத்தி மந்திரியான உங்கள் அணுகுமுறையிலும்புதுமையேதேனும் இருக்க வேண்டுமே?''

''நிறையவே இருக்கிறது. தொழிலகங்கள் தொந்தரவின்றி நடப்பதற்கும்விரிவடைவதற்கும் வசதியாக லைசென்ஸ் முறைகளையே ஏராளமான அம்சங்களில் ஒழித்துக் கட்டி விட்டோம். உதாரணமாக ஜீப் செய்கிறவர்கள் இனி கார் செய்யலாம். அதற்குத் தனியே லைசென்ஸ் பெற வேண்டாம். இப்படிப் பல கட்டுப்பாடுகளைத் தளர்த்தியிருப்பதால் தொழில் வளம் பெருகும். வேலை வாய்ப்புகளும் அதிகரிக்கும். அந்த அளவுக்கு ஏழைமை ஒழியவும் செய்யும்.''

''ரொம்ப நம்பிக்கையோடு பேசுகிறீர்கள்; ஆனால் கிராமப்புறங்களில் அல்லவா வேலையற்றவர்கள் அல்லது வருடத்தில் சில மாதங்கள் மட்டுமே வேலை உள்ளவர்கள் அதிகம்?''

''உண்மைதான். கிராமங்களில் தொழில் வளர்ச்சி பெருக, தொழில் வளர்ச்சியில் பின்தங்கிய வட்டாரங்கள் எவை என்று நிர்ணயிக்க ஒரு சர்வே ஆரம்பிக்கப்பட்டுள்ளது. படித்துவிட்டு வேலையில்லாமல் இருக்கும் இளைஞர்கள் சுயமாகத் தொழில் தொடங்க வசதி செய்துதர வேண்டிய மாவட்டத் தொழில் மையங்களை முடுக்கிவிடப் போகிறோம்.''

''தொழில்கள் ஏராளமாகத் தொடங்கினாலும் சரியாக நிர்வகிக்கப்பட வேண்டுமே. அது அல்லவா முக்கியம்?''

''ரொம்ப சரி. அரசுத் துறைத் தொழில்கள் லாபகரமாக இயங்க வேண்டும்; சும்மா சால்ஜாப்பு கூறிக் கொண்டே இருக்கக் கூடாது என்று எச்சரித்து வருகிறோம். தனியார் துறையிலும் முன்னேற்றத்துக்கு நிறைய வாய்ப்புண்டு. உதாரணமாக, இருக்கின்ற வசதிகளைக் கொண்டே அவர்கள் இன்னும் அதிகமாக் உற்பத்தி செய்யலாம். இதற்கு ஆராய்ச்சி, அபிவிருத்தி மனப்பான்மையைத் தொழில் துறையில் உள்ளவர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். இருக்கிற உற்பத்தித் திறனை முழுவதுமாய்ப் பயன்படுத்திக் கொண்டோம் என்பது உறுதியான பிறகே புதிய விஸ்தரிப்புத் திட்டங்களில் இறங்க வேண்டும்.''

''தமிழகத்துக்கு மத்திய அரசின் உதவி போதிய அளவு கிடைப்பதில்லை; அதனால் தான் தொழில் துறையில் தேக்கம் என்று சொல்லப்படுகிறதே?''

''என்ன இந்தக் கேள்வியைக் காணுமே என்று இவ்வளவு நேரமாக நினைத்துக்கொண்டிருந்தேன், கேட்டுவிட்டீர்கள்!'' என்று புன்னகை புரிந்தார் அமைச்சர்.

''இந்தக் கேள்விக்காகத்தான் மற்ற பூர்வ பீடிகைக் கேள்விகள் எல்லாமே!'' என்றேன்.

''அப்படித்தான் இருக்கும் என்று நினைத்தேன்....: நீங்கள் அரசியல் நோக்கில் கேள்வியைப் போட்டாலும் நான் அரசியல் கலப்பின்றியும் விருப்பு வெறுப்பின்றியும் சொல்கிறேன், கேட்டுக் கொள்ளுங்கள்'' என்ற அருணாசலம் தொடர்ந்தார்:

''ஒரு மாநிலத்தின் தொழில் வளர்ச்சி அந்த மாநில அரசின் கொள்கைகளையும் செயல் திறனையும் செய் நேர்த்தியையும் செயல்படும் வேகத்தையும் பொறுத்தது. மத்திய அரசு தொழில் வளர்ச்சிக்கு எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டு எல்லா உதவிகளையும் எல்லா மாநிலங்களுக்கும் செய்து தருகிறது. இதில் தமிழகம் புறக்கணிக்கப்படுகிறது என்ற குற்றச்சாட்டு அர்த்தமற்றது. பார்க்கப் போனால், வேறு பல மாநிலங்களைக் காட்டிலும் தமிழ்நாடுதான் மத்திய அரசின் ஆதரவை அதிகமான அளவில் பெற்றுள்ளது. சில புள்ளி விவரங்களைக் கவனியுங்கள்:

''1985 ஜனவரியிலிருந்து செப்டம்பர் வரை தமிழகத்தில் 84 தொழிற்சாலைகள் ஆரம்பிக்க மத்திய அரசு அனுமதி கொடுத்திருக்கிறது. இது தவிர தமிழக அரசு மூலமாக 148 தொழிற்சாலை லைசென்ஸுகள் வழங்கப்பட்டுள்ளன. வேறு எந்த மாநிலத்துக்கும் இத்தனை லைசென்ஸ்கள் கொடுக்கப்படவில்லை. வடமாநிலங்களில் மிகப் பெரிய மாநிலம் உத்தரப்பிரதேசம். அதற்குக் கிடைத்த லைசென்ஸ்கள் 61 தான். மகாராஷ்டிரத்துக்கு 105.

''மேலும் பின்தங்கிய பிரதேசங்களில் தொழில் தொடங்கத் தரப்படும் லைசென்ஸ்கள் என்று எடுத்துக் கொண்டால் தமிழகத்



ஒரு சேவகன்: தமயந்தி அம்மா ஏன் கவலையாய் இருக்காங்க...?

மற்றொரு சேவகன்: வரவர நளனுடைய சமையலை வாயில் வைக்க முடியவில்லையாம். அதான்!!

—ராஜி ராதா.



ஆசிரியர்: புதுசா ஒரு பழமொழி சொல் பார்க்கலாம்.

மாணவன்: கடவுளே கால்நடையாப் போனாராம், பூசாரி கேட்டானும் 'புல்லட்.'

— அன்பு மதியழகன்.



அவன்: பல் டாக்டர் என்னை ஏமாத்திட்டார்!

இவன்: எப்படிச் சொல்றே?

அவன்: 'பல்லைக் க்ளீன் பண்ணிடுங்கன்னு போனேன். பல் பொடியைக் கொஞ்சம் எடுத்துக் கொடுத்துத் தேய்னு சொல்லிப் பத்து ரூபாய் வாங்கிட்டாரே!

— சீர்காழி சோமு.

துக்கு 58; உத்தரப்பிரதேசத்துக்கு 37; மகாராஷ்டிரத்துக்கு 34; ஆந்திராவுக்கு 32. ஆக, இதிலும் தமிழகம்தான் மத்திய அரசின் பார்வையில் முதலிடம் பெறுகிறது.

''எனவே தமிழகத்தில் தொழில் துறை 'தேக்கம்' என்றால் அதற்கு மத்திய அரசு காரணம் இல்லை; காரணங்களை நீங்கள் வேறு எங்கேனும்தான் தேடவேண்டும்.''

ராஜீவ்காந்தியின் அமைச்சரவை தொழில் துறைக்கு ஊக்கமளிக்க எடுத்துள்ள ஏராளமான நடவடிக்கைகளைப் பற்றிய விவரங்களை விரல் நுனியில் வைத்திருந்து நம்முன் உதிர்க்கிறார் அருணாசலம். குறிப்பாகத் தொழில் வளப் பெருக்கத்துக்கு மட்டுமின்றி தொழில் நுட்ப அபிவிருத்தி, ஆராய்ச்சிக்கும் நவீனப்படுத்தும் முயற்சிகளுக்கும் பெரிய அளவில் ஊக்கம் அளிக்கப்பட்டிருப்பதைப் பெருமிதத்தோடு கூறுகிறார்.

எதைச் சொன்னாலும் உறுதியாகத் தக்க ஆதாரங்களோடு பேசும் அருணாசலம், பிறந்த ஊர், நெல்லை மாவட்டத்தில் வெள்ளாளன்விளைக் கோட்டை. தூத்துக்குடியிலும் பாளையங்கோட்டையிலும் படித்து, காந்தி கிராமத்தில் பட்டம் பெற்றவர். சென்னை சட்டக் கல்லூரியில் தேறி வழக்கறிஞராகத் தொழில் நடத்தியவர். மனைவி அமலா. குழந்தைகள் 2+2. மக்கள் சபைக்கு மும்முறை தேர்ந்தெடுக்கப்பட்டவர். 1979ல் சஞ்சய் காந்தியுடன் திஹார் சிறைச்சாலையில் சேர்ந்திருந்த அனுபவம் உண்டு. இந்திரா காந்தியிடமும், காமராஜரிடமும் அவர்களுடைய மனிதாபிமானம் காரணமாக அசைக்க முடியாத பக்தி கொண்டிருக்கும் இவர், மாணவர் காங்கிரஸ் தலைவராகவும் பல காலம் பணியாற்றியிருக்கிறார்.

''அரசுத்துறை, தனியார் துறை இரண்டுமே போட்டி போட்டுக் கொண்டு சுறுசுறுப்படைய வேண்டும்; ஒவ்வொரு ஊழியரும் அதிகாரியும் தேசபக்தியுடன் செயலாற்ற வேண்டும்; இந்தியா வளர்ந்து வரும் நாடு என்ற நிலை மாறி வளர்ந்துவிட்ட நாடு என்ற பெருமையை வெகு சீக்கிரமே அடைய வேண்டும். இதுதான் இந்த அமைச்சரவையின் லட்சியம். தொழில் துறையும் அரசும் ஒன்றை ஒன்று எதிர்த்துக் கொண்டிராமல் கைகோத்துக்கொண்டு மேற்படி லட்சியத்தை அடைய முன்னேற வேண்டும்'' என்கிறார் அருணாசலம், ஆர்வமும் ஆசையுமாக.

யார் கண்டது, போகிற போக்கைப் பார்த்தால் அவர் லட்சியம் நிறைவேறிவிடும் போல்தான் தோன்றுகிறது. ஆனால் ஒன்று, அண்மையில், அறிவிக்கப்பட்ட பெட்ரோலியம் பொருட்களின் விலை உயர்வு போன்ற அசட்டுத்தனங்களை மத்திய அரசு மறுபடி செய்யாமலிருக்க வேண்டுமே!

— பி.எஸ்.எம்.

---



# மருமகள்

எத்தனை பழைய்ய தலைப்பு!

ஆனால் கதை என்னவோ ஜரூராக இருக்கிறது. படுத்த படுக்கையாய் இருக்கும் தாத்தாவுக்குப் பிழைப்போமா என்று சந்தேகம். ஒரே உறவு பேரன். 'கொண்டு வாடா, உன் காதலியை. நான் சாகுமுன் பார்க்க வேண்டும்' என்கிறார். சொந்தக் காதலி காஷ்மீர்ப் பனிப்புயலில் சிக்கியிருக்க, அவசரத்திற்கு ஒரு பூக்காரியைக் காதலியாய் செட்டப் செய்கிறான் பேரன். தாத்தாவுக்கென்னவோ அவளை வெகுவாய்ப் பிடித்துவிட, அவளே அந்த வீட்டு மருமகள் என்று தீர்மானிக்கிறார். உண்மையான காதலி திரும்பி வர.... பேரனுக்கும், தாத்தாவுக்கும் இடையில் லடாய். அப்புறம்?

சுபமான முடிவுக்கு ஏற்ற திருப்பம்.

கதையைவிட அதைத் தூக்கி நிறுத்தும் மும்மூர்த்திகள் முக்கியம்: சிவாஜி, ரேவதி, ஜெய்சங்கர். ஒய்.ஜி. மகேந்திரனுக்கும் நினைவில் நிற்கும் ரோல்.

இடைவேளைவரை அநேகமாய்ப் படுக்கையிலேயே இருக்கும் தாத்தாவாய் சிவாஜி. டயட் கண்ட்ரோலில் டாக்டர் கண்டிப்பாய் வைத்திருக்க, ரேவதி கொண்டு வரும் ரகசியப் பிரியாணி, முட்டை, பாயசம் சமாச்சாரங்களை நொட்டை விட்டுக் கொண்டு ஏக்கத்தோடு பார்ப்பதும் கையில் ஒரு கவளத்தை எடுத்துத் துடிப்போடு வாயருகே கொண்டு போய் டாக்டரின் குறுக்கீட்டால் ஏமாறுவதும்.... சிவாஜியின் அமர்க்களமான ஸீன்.

சிவாஜியும், ஜெய்சங்கரும் நெருங்கிய நட்புடன் ஒருவரை ஒருவர் சீண்டிக் கொள்ளும் காட்சிகளில் நிறைய உயிர் இருக்கிறது. கலகலப்பான வசனங்களால் நம்மில் புன்னகைகளைச் சுண்டி இழுத்திருப்பவர் ஆரூர்தாஸ்.

நடிப்பதற்காக வந்துவிட்டு, சுரேஷிடம் நிஜமாகவே ஈடுபாடு விழுந்துவிட, தாத்தாவிடம் ஆழமான பாசம் வளர்ந்துவிட, பின்னால் 'நீ விலகு' என்று சுரேஷ் சொல்லும் நேரம், ஏமாற்றமும் அவமானமும் தாக்க, ரேவதிக்கு நல்ல வாய்ப்பு.

'பாருங்கப்பா, எனக்காக இல்லாவிட்டாலும் தாத்தாவுக்காக வான்னு சொல்றே. தாத்தாவுக்காக இல்லாட்டியும் எனக்காக வான்னு சொன்னா என்னவாம்' என்று தன் குறையை அப்பாவின் மாலையிட்ட ஃபோட்டோவின் முன் நின்று புலம்பும் பாங்கு ஒன்றே போதும்.

எந்த இடத்திலும் தொய்வில்லாமல் எடுத்துச் சென்றுவிட்டு, க்ளைமாக்ஸில் அத்தனை அழுத்தம் இல்லாமல் செய்துவிட்டீர்களே, கார்த்திக் ரகுநாத்.

இடைவேளைக்கப்புறம் அடுத்தடுத்து வரும் இரண்டு பாடல்கள் ஓ.கே. கொஞ்சம் இரைச்சலைக் குறைத்துக் கொண்டால் நன்றாயிருக்கும், சந்திரபோஸ்!

— ஜெயமன்மதன்.

கல்கி

# நாம் இருப்பது தமிழ்நாடய்யா, தமிழ்நாடு!



**வேறு வழியில்லை!**

* 'ம.வி.யிலிருந்துதப்பிக்காரர்ஜீவுக்குத்தந்தயோசனைகள்' அனைத்தும் முதல்தரமானவை. நமது ம.வி. செயல்படும் முறையைப் பார்க்கும்போது பிரதமர் இவற்றைப் பின்பற்றித்தான் ஆகவேண்டும். வேறு வழியே இல்லை!

சென்னை—93. எஸ். சம்பத்குமார்.

**பிடியுங்கள் பிரைஸ்!**

* தமிழ்நாட்டுக்குத் தமது புனிதக் காலடிகளைக் கொண்டு முதன் முதலாகத் தூய்மைப்படுத்த வருகின்ற இரண்டாம் அருள் சின்னப்பரின் அட்டைப் படம் பர்ஸ்ட் பிரைஸ் வாங்கிவிட்டது! பகைவனுக்கும் அருளிய அவரைப் பற்றிய ஸ்பெஷல் ரிப்போர்ட் மனத்தில் மீண்டும் ரீங்காரமிடுகிறது.....!

கோவை—16. கா.க. வேலாயுதன்.

**வளரட்டும் நட்புறவு!**

* மதமாச்சாரியங்கட்கு அப்பாற்பட்ட போப் ஆண்டவர் பற்றிய முழுத் தகவல்களையும் கல்கியில் கண்டு மெய்சிலிர்த்துப் போனேன். வளரட்டும் நட்புறவு!

பி. மேட்டுப்பாளையம். எம்.பி. இளங்கோ.

**உங்களுக்குத் தெரியாதா?**

* 'உதய மார்த்தாண்டம்' உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் இறுதித் தேர்வில் இருமுறை 100 சதவித வெற்றி பெற்றுக் கல்வி அமைச்சரிடம் சான்றிதழ் வாங்கியதே போதுமென்று அதிகாரிகள் விட்டுவிட்டார்களோ என்னவோ! உம்.... இனி எங்கே கவனிக்கப் போகிறார்கள். நல்லதுக்கெல்லாம் நமது அரசு துணை போகாது என்பது உங்களுக்குத் தெரியாதா என்ன?

புதுவை—1. இ.எம். கோதண்டம்.

**நாம் இருப்பது தமிழ்நாடு!**

* இப்படிப்பட்ட உயர்நிலைப் பள்ளிகளுக்கெல்லாம் ஆச்சரியமும்வேதனையும்பட்டால்,மாவட்டச்சுற்றுலாவின்போது ஒரு மூலையில் உட்கார்ந்து 'ஓ'வென்று அழத்தான் வேண்டியிருக்கும். நாம் இருப்பது தமிழ் நாடைய்யா, தமிழ்நாடு. மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள்.

பெங்களூர்—10. வி. ரமேஷ்.

**பாராட்டுக்குரியது!**

* நம் நாட்டின் கல்வியின் தரத்தினை ஸ்ரீசத்ய சாயி பாபாவின் உரையுடன் தலையங்கத்தின் மூலம் தெளிவு படுத்தி, 'பாபா கூறிய யோசனையை அரசு ஏற்க வேண்டும்' என வலியுறுத்தியுள்ளதுபாராட்டுக்குரியது!

சீர்காழி. இரா. சுதாகர்.

**'கை'தட்டி வரவேற்போம்!**

* உலக சாதனையை முறியடித்துப் புதிய சாதனையை ஏற்படுத்தும் முயற்சியில் அயராது ஈடுபட்டு வெற்றி கண்டுள்ள ஜெயராமன் அவர்களின் தன்னம்பிக்கையும் விடாமுயற்சியும் 'கை'தட்டி வரவேற்கப்பட வேண்டியவை!

கும்பகோணம்—1. பா. கிருஷ்ணதாஸ்.

**வேகமாகப் பரவும் வியாதி!**

* கிரிக்கெட் மேட்ச் காமென்ட்ரியைப் பற்றித் 'தராசு' கூறியுள்ள யோசனையை முழுமனதாக ஆதரிக்கிறேன். காமென்ட்ரி வியாதி, பள்ளி கல்லூரிகளிலெல்லாம்கூட இப்போதுவியாபித்துள்ளதுஎன்பதைக் கேட்கும்போது வேதனை ஏற்படுகிறது.

குடியாத்தம் (வ.ஆ.). ஆர். அரிகோபி.

**மனசு வையுங்க சாரே!**

* இனிமும் விடாமல் தினுள் பேப்பர் படித்தால்தான் தராசிடம் கேள்வி கேட்க முடியுமோ? அப்படியானால் என்னைப் போன்ற கைம்பெண்கள், பேப்பர் படிக்க முடியாதவர்களெல்லாம்கேள்விகேட்கவேமுடியாதா? கொஞ்சம் மனசு வையுங்க சாரே!

விருத்தாசலம்—1. அ. கயல்விழி.

**எழுதியவருக்குப் பாராட்டு!**

* 'எங்கள் ஊர் எம்.எல்.ஏ.' சிறுகதை படித்தேன்; அருமை! அதில் வரும் எம்.எல்.ஏ.வைப் போல நம் நாட்டில் நான்கு பேர் இருந்தால்—அதாவது வீட்டு நலம் இன்றி, நாட்டு நலன் கருதி, நம் ஊர் செழித்து வளர, தேவைப்பட்டால் தாம் உயிர் துறப்பதுகூட நல்லது என எண்ணும் ஒரு சில எம்.எல்.ஏ.க்கள் இருந்தால் நம் நாடு பொன் கொழிக்கும் பூமியாய் இருக்கும் என்பதில் ஐயமில்லை. அதை எழுதிய மலர் வண்ணனுக்கு என் பாராட்டுக்கள்.

குடியாத்தம். ஏ. பிரபு சங்கர்.

**வேஸ்ட்! வேஸ்ட்!**

* ஒன்றுக்கும் புண்ணியமில்லாத படங்களுக்கும் வேலையில்லாமல் விமர்சனம் எழுதிப் பக்கத்தை வீணடிப்பதைவிட உருப்படியான காரியம் ஏதாவது செய்தால் என்னவாம்?

நெல்லிக்குப்பம். ஜெ. முகமது பாரூக்.

**நினைத்தாலே ஏக்கம்!**

* மறைந்த டாக்டர் திருமூர்த்தி அவர்கள் செய்த தொண்டினைப் படிக்கும்போது, இப்போது அப்படிப் பட்ட சேவை புரிய எந்த டாக்டர்களாவது முன்வருவார்களா என்ற ஆதங்கம்தான் ஏற்படுகிறது.

பண்ருட்டி. ஏ. ஷேக் முஹம்மது.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.



சின்னஞ்சிறு காயத்தில்கூட அழுக்குப் புகுந்துவிடும்
இதனால் காயம் பெரிதாகும், கஷ்டம் உருவாகும்.

# உடனடியாக பாண்ட்-எய்ட் உபயோகியுங்கள்

உலகில் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்—அது, காயங்களில் அழுக்குப் புகாமலும், தொற்றிலிருந்தும் காயங்களைப் பாதுகாக்கிறது.

ஆகவேதான் பாண்ட்-எய்ட் முழுப் பாதுகாப்பானதாகும். பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள திருப்பணமான ஆன்டிஸெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலுள்ள நுண்துளைகள் காயங்களை விரைந்தாற்றிட உதவுகின்றன. ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**கைவசம் வைத்திருங்கள் பாண்ட்-எய்ட்**
**ஏனென்றால், காயங்கள் எங்கும் எந்நேரமும் ஏற்படலாம்.**

Johnson & Johnson

OBM/2513 TAM

REGISTERED No. M 6392
Registered as a Newspaper in Sri Lanka

அப்பா ஜீ?

பார்லே-G!

ஏன் 'பார்லே-G'?

நீங்கள் விரும்பும் ஒரு பிஸ்கட்டிற்கு
இது சுருக்கமான, இனிய செல்லப் பெயர்.
அது பார்லே க்ளுகோ என்பதில் சந்தேகம் இல்லை.
உண்மையில் 'பார்லே-G' என கூறும்பொழுது
தேச உணர்வு மிகுதியாகிறது. தவிர இப்பெயரில் அடங்கி உள்ள
நிறைவுள்ள அம்சங்கள்—நிறைவுள்ள சத்து—சுவையான பால்,
கோதுமை மற்றும் சர்க்கரையிலிருந்து கிடைக்கிறது.
நிறைவுள்ள வளர்ச்சி—ஊட்டச் சத்து நிரம்பிய
க்ளுகோ இதனை வழங்குகிறது.
நிறைவுள்ள ருசி—இது நீங்கள் அறிந்ததே!




PARLE
Gluco

இதன் செல்லப்பெயர் 'பார்லே-G'

இந்தியாவில் அதிக விற்பனையாகும் பிஸ்கட். சுவை மிக்க சத்துணவு.